"திமிர் பிடித்த ஆடவர் சில ரது காம வெறிக் கிரையாகிய மகளிரே நாளடைவில் தாசிகளாகப் பரிணமித்தனர். சுயநல மிக்க ஆடவர்கள் தங்கள் கூடா வொழுக்கத்துக்கு இன்னும் சௌகரியத்தை யேற்படுத்திக் கொள்ள கடவுள் பெயரையும், சமயத்தின்பெயரையும் ஆதரவாகக் கொண்டனர். ஆதலால், இக் கூட்டம் அதிகமாகி ஒரு தனி சமூகமாய் விட்டது. உலக உற்பத்திக்கே—மனித வளர்ச்சிக்கே—நிலைக்களனுகை உள்ள தாய்மைத் தன்மை வாய்ந்த பெண்ணினத்தில் மிகக் கேவலமான தாசிகள்—வேசைகள் என்று ஒரு பிரிவு உண்டாயிருப்பதற்கு இதுதான் காரணம்."

என்கிறுள் கதாநாயகி ரமணி.



"தாசிகள் என்றால் ஜன சமூகத்தை அழிக்கும் விஷப் புழுக்கள் என்பது என் எண்ணம். கொலைகாரர்கள், கொள்ளை யடிப்பவர்கள், கள்வர் முதலியோரைக் காட்டிலும் இத் தாசிகள் மிகக் கொடியவர்கள்; ஏனென்றுல், கொலை, கொள்ளை முதலிய மாபெரும் பாதகங்களைச் செய்பவர்களால் ஏற்படும் தீமையைக் காட்டிலும் ஜன சமூகத்துக்கு இந்தத் தாசிகளால் உண்டாகும் தீமைகள் அதிகம்."

என்கிறுன் கதாநாயகன் கலியாணசுந்தரம்.

இவ்விருவித அபிப்பிராயங்களில் எது சரி?

சிந்தனை சைத்ரீகர்

"ஜீவா"

தீட்டிய வாழ்க்கைச் சித்திரம்

# தாசி ரமணி

என்னும் நவீனத்தில்

இதற்குச் சரியான பதிலைக் காணலாம்.

பல சித்திரப் படங்கள் கொண்ட அழகி

விலை ரூபா 1—8—0 (தபாற் செல

ஓம்




"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.

தொகுதி 30 } தாரண௵ ஆவணிமீ கவ — 1944௵ ஆகஸ்ட்மீ 16உ { பகுதி 2

## கடவுள் வணக்கம்.

அழிப்பர்ஐவர் புரவுடை யார்கள்
ஐவரும் புரவாசற ஆண்டு
கழித்துக் காறபெய்து போயினபின்னைக்
கடைமுறை உனக்கே பொறையானேன்
விழித்துக் கண்டனன் மெய்ப்பொருள்தன்னை
வேண்டேன் மானுட வாழ்க்கையீதாகில்
இழித்தேன் என்தனக்கு உய்வகை யருளாய்
இடைமருதுறை எந்தை பிரானே! (1)

கொடுக்க கிற்றிலேன் ஒண்பொருள் தன்னைக்
குற்றஞ் செற்றம் இவை முதலாக
விடுக்க கிற்றிலேன் வேட்கையும் சினமும்
வேண்டில் ஐம்புலன் என்வசமல்ல
நடுக்கமுற்றதோர் மூப்புவந் தெய்த
நமன்தமர் நரகத்திடல் அஞ்சி
இடுக்கண் உற்றனன் உய்வகை யருளாய்
இடைமருதுறை எந்தை பிரானே! (2)

ஐவகை அரையரவராகி ஆட்சிகொண்டு
ஒருகா லவர் நீங்கார்
அவ்வகை யவர்வேண்டுவ தானல்
அவரவர் வழியொழுகி நான்வந்து
செய்வகை யறியேன் சிவலோகா!
தீவணா! சிவனே! எரியாடீ!
எவ்வகை எனக்கு உய்வகையருளாய்
இடைமருதுறை எந்தை பிரானே! (3)




# உள்ளுறை.

இதனுல்தான், அரசியல் வாதிகள் சிலர், அரசியலில் மதக் கொள்கையைக் கொண்டுவந்து காந்திஜி குழப்பி விடுகிருர் என்று அறியாமை காரணமாகப் புகார் செய்கின்றனர். சர்வ தேசங்களிலும் தோன்றிய சமயாசாரியார்களும் ஆன்றோர் களும் மக்களிடையே மகிழ்ச்சியையும் ஒற்றுமையையும் நில வச் செய்யக்கூடிய சமரச சன்மார்க்கக் கொள்கையைத்தான் போதித்துச் சென்றிருக்கிருர்கள். ஒரு சமூகத்தில்-ஒரு சமூ கத்தில் உள்ளவர்கள் மட்டுமல்லாது, உலகிலுள்ள அனைவரும் சகோதரர்களாய் வாழ்வேண்டுமென்று பாடுபட்டார்கள். இப் போது "புது உலக அமைப்பு, புது உலக அமைப்பு" என்று சொல்லப்பட்டு வருகிறதே! அது எவ்வித மிருக்கும்? எவ்வித மிருக்க வேண்டுமென்று உலகப் பிரமுகர்கள் ஒவ்வொருவித மாகச் சொன்னுலும், உலகிலுள்ள எல்லா மக்களும் சகோ தரர்களாய் அளவளாவி வாழும் நிலைதான் புது உலக அமைப் பாக இருக்கும் என்று மகாத்மாகாந்தி முதலிய நம் நாட்டுப் பெரியார்கள் கருதுகிருர்கள். "எல்லாம் நம் ஊரே; எல்லா ரும் நம் உறவினரே" என்ற உலக சகோதரத்துவக் கொள்கை ஏற்படுவதற்கு முன், முதலில் தம் குடும்பத்திலும், பின் ஊரி லும், பிறகு நாட்டிலும் அதன்பின் உலக முழுவதிலும் ஏற்பட வேண்டுமென்ற அடிப்படையான கருத்துடன் தான் மகாத்மா காந்தி திட்டம் வகுத்து வேலை வகுத்து வருகிருர். இது ஆகஸ்டு மாத ஞாபகார்த்த நாள் பற்றிய அறிக்கையிலும் தொனிக்கிறதனுல், அனைவரும் அக் கொள்கையை ஏற்று நடக்க வேண்டுகிறோம். "எவ்வளவு மெலிந்திருப்பினும் ஒவ் வொரு ஆணுக்கும் பெண்ணுக்கும் தன் மதிப்பும் சுதந்திரமும் உண்டு; அதை அவரவர்கள் பாதுகாக்க வேண்டும்" என்று அடிகள் வற்புறுத்திக் கூறியிருப்பதன் பொருளை அப்போது தான் உணர முடியும்.

---

குறிப்பு:—எதிர்பாராதவாறு நேர்ந்த அசௌகரியம் காரண மாக "மைவண்ண"னின் 'ஆத்ம ஸமர்ப்பணம்' என்ற கட்டுரை யின் தொடர்ச்சி இந்த இதழில் வெளிவரவில்லை. அடுத்த இதழில் அவசியம் வெளிவரும்.

—ஆசிரியர்.

கோட்டை கொத்தளம் இருந்த இடத்தில் தான் இந்தச் சூன் யம் நிறைந்த பாலை....பாவம்! அந்தக் காவல்காரனுடைய அற்ப உறக்கமானது இப்படி ஒரு மீளாத உறக்கத்துக்குக் காரணமாக வேண்டும் என்று இருக்கிறது?

# மீளாத உறக்கம்*

கு. அழகிரிசாமி



கழுகுமலைக்குப் பின்னும் ஒரு மைல்தான் இருந்தது. ஆனால் வெயிலின் கொடுமையை நினைக்கும்போது அது பத்து மைலாகத் தோன்றியது. ஆறுமைல் தூரம் அந்தக் கல்லும் முள்ளும் நிறைந்த காட்டில் நடந்துவந்த களைப்பைச் சொல்லி முடியாது. காலுக்குப் பத்து முள்ளாவது தைத்து முறிந்திருக்கும். யார்மேலாவது வீண்பழி சுமத்திக் கோபித்துக் கொள்ள வேண்டும்போல் எரிச்சலாக இருந்தது மனம்.

"அப்பா! பள்ளிக்கூடத்தில் தமிழ் வாத்தியார் சொல்லிக் கொடுத்த பாலை நிலத்துக்கு உதாரணம் காட்ட வேறெங்கும் போக வேண்டாம்போலிருக்கிறதே, இதைவிட்டு?" என்று பக்கத்தில் வரும் என் நண்பனைப் பார்த்துக் கேட்டேன்.

கழுகுமலைக்கு ஆறுமைல் தெற்கே, ரயிலுக்கும் மோட்டாருக்கும் எட்டாத இடத்தில் இருந்தது ராஜ நாராயணனுடைய ஊர். பேர்தாக் குறைக்குத் தன் ஊரைப்பற்றியும் தாலுக்காவைப் பற்றியும் பழம்பெருமை பாராட்டுவதிலோ சலிக்கவே மாட்டான்.

"ஏன்? இந்தப் பூமிக்கு என்ன குறைச்சல்?" என்று அர்த்தமில்லாமல் பதில் சொன்னான். அவன் பேச்சைக் கேட்கும் நினைவில் எதிரில் இருந்த குழியில் விழப் போய்விட்டேன். அவனுக்கோர் சிரிப்பு!

"எங்காவது மசானத்துக்கு வந்து விட்டோம் போலிருக்கிறது" என்று சொல்லி விலகிவந்தேன்.

"உலகத்தின் எல்லாப் பாகத்திலும் ஜன நெருக்கம் அதிகமாய் இருந்ததால், இந்தப் பாலைநிலத்தில் வந்து உங்கள் மூதா

---

* இந்தக் கதையின் நிகழ்ச்சி உண்மையாக நடந்த விஷயம் என்று கழுகுமலைக்குப் பக்கத்திலுள்ள கிராம வாசிகள் சொல்லுகிறார்கள். அவர்கள் சொன்னதை வைத்துக் கொஞ்சம் கற்பனையும் சேர்த்து இந்தக்கதை எழுதப் பட்டிருக்கிறது. கல்தூண்களும், வாசல் நிலைகளும் இன்னும் அங்கே நிற்கின்றன. திருநெல்வேலி ஜில்லாவில் கோவில் பட்டிக்கு மேற்கே பன்னிரண்டாவது மைலில், கழுகுமலைக்குத் தென்புறத்தில் இருக்கிறது, பழங்கோட்டை என்னும் ஊர்.

தையர்கள் குடி புகுந்தார்கள் பேரிலிருக்கிறது. உலகம் தோன்றியது முதல் பாலையாகக் கிடந்த பிரதேசத்தில் மனித சஞ்சாரம் ஏற்பட்டது......"

"நீ சொல்வது தப்பு" என்று இடைமறித்தான் ராஜ நாராயணன். "கோட்டையும் கொத்தளமும் இருந்த இடம்தான் பாலையாகப்போய் விட்டதே ஒழியப் பாலையில்வந்து குடியேறவில்லை. நீ தடுக்கி விழுந்தாயே, அந்தக் குழியை எதற்காக வெட்டியிருக்கிறார்கள் தெரியுமா?" என்று கேட்டான்.

எனக்கு எப்படித் தெரியும்? பேசாமல் அவன் முகத்தைப் பார்த்தேன். அவன், அதோடு இன்னும் பல குழிகள் வெட்டப்பட்டிருந்ததை விரலால் சுட்டிக் காட்டினான்.

"இந்த இடத்தில் முன்னால் ஒரு பெரிய ஜமீன் இருந்தது. இதோ எதிரே தெரியும் கல்தூண்களும் நிலையும் கோட்டை வாயில்கள் இருந்த இடம். இப்போது அரண்மனை எல்லாம்போய் இந்தப் பழங்கோட்டை ஊர்மட்டும்தான் மிஞ்சி இருக்கிறது......"

"இந்தக் குழிகளை ஏன் வெட்டியிருக்கிறார்கள்?"

"எங்காவது புதையல் இருக்காதா, அரண்மனை இருந்த இடமாயிற்றே? என்ற பேராசைதான். இரண்டொருவருக்குச் சில தங்க நகைகள் கூடக் கிடைத்திருக்கின்றன" என்றான்.

பழங்கோட்டை ஊரைக் கடந்து ஊருக்கு வடக்கேயுள்ள கோவிலில் ஒரு குளத்தின் முன்பாக வெயிலுக்காக உட்கார்ந்தோம். நண்பன் அந்த அரண்மனையைப் பற்றிய கதையை ஆரம்பித்தான். அதைக் கதையாகவே எழுதுகிறேன்.

* * * *

சுமார் நூறு வருஷங்களுக்கு முன்பு இந்தப் பழங்கோட்டையும், இதற்குத் தெற்கேயும் மேற்கேயும் மூன்று மூன்று மைல் தூரத்திலுள்ள சாமலையும், நாலுவாசல் கோட்டையும் பிரசித்தி பெற்ற ஜமீன்கள். மூன்றும் வீரம்மிக்க மறவர்குலத்து ஜமீன்தார்களால் ஆளப்பட்டு வந்தன. ஒருவருக்கொருவர் மிகவும் நெருங்கிய உறவினர்கள். அதிலே சற்றுப் பெரிய ஜமீன்தான் பழங்கோட்டை ஜமீன்.

ஊருக்குத் தென்புறம் கோட்டையும் அரண்மனையும் இருந்தன கோட்டை வாசலில் உள்ள கதவுகளில் ஓசைமிக்க வெண்கல மணிகள் கட்டியிருக்கும். பிரமாண்டமான கதவுகள் ஒவ்வொன்றும். நடு ராத்திரியில் ஒரு கதவைப் பலமாகச் சாத்தினால் மூன்று மைலுக்கு அப்பாலுள்ள சாமலையிலும், நாலு வாசல் கோட்டையிலும் வெண்கல மணிகளின் நாதம் கலகலவென்று கேட்கும். அந்தச் சப்தத்தைக் கேட்டு அந்த ஜமீன்களின் கோட்டைக் கதவுகளையும் மூடுவார்கள். அங்கே மூடும்போதும் பழங்கோட்டைக்கு மணியோசை கேட்கும்.

பழங்கோட்டை ஜமீன்தாராக அப்போது இருந்தவரின் பெயர் வலங்கைப் புலித்தேவர். அவர் தான் கடைசி ஜமீன்தார். பராக்கிரமத்திலும், பக்தி ஒழுக்கத்திலும் நிகரற்று விளங்கியவர். அவர் கட்டிவைத்த கோவில்தான் ஊரின் வடபுறம் இருக்கும் ஈஸ்வரன் கோவில். அதற்கு முன்பாக இருக்கும் குளமும் அவரால் வெட்டப்பட்டது. அவரைப்போன்ற ஆக்ரோஷமும், அவமானத்துக்கு அஞ்சும் சுத்த வீரத்தன்மையும் உடைய ஜமீன்தார் அதுவரையும் பட்டத்துக்கு வந்ததில்லை யென்று சொல்லிக் கொள்வார்கள்.

வலங்கைப்புலித் தேவரிடம் பிரசித்தி பெற்ற ஒரு குதிரை வீரன் இருந்தான். அவன் பெயர் துரைப்பாண்டியன்; ஜமீன்தாரின் சொந்த மருமகன் தான். பழங்கோட்டைக்கு வடபுறத்தில் உள்ள குன்றின் மேல்—மிகப் பெரிய பாராங்கற்களும், குண்டு குழிகளும் நிறைந்த குன்றின்மேல் இருவரும் குதிரைச் சவாரி செய்து உச்சிவரைபோய் இறங்குவார்கள். அவ்வளவு கைதேர்ந்த சாதனை !

வலங்கைப்புலித் தேவர் ஆட்வர்களுக்குள்ளே ஒரு சிறந்த ஆணழகன். அவருடைய அழகானமார்பும், புஜங்களும் யாரையும் கவர்ந்துவி ்ம். அவருடைய ஒரே பெண் குழந்தை, ஆண்வாரிசு இல்லை என்ற கவலையையும் போக்கடித்த பெண் குழந்தையின் பெயர் பொன்னம்மை. தந்தைக்கு ஏற்ற குழந்தை. வயது பதினெட்டு இருக்கும். பெயருக்கேற்றபடி பொன்மேனி கொண்டவள். முகத்தில் அழகோடு சாந்தமும் பவ்வியமும் பால்வடித்துக் கொண்டிருந்தது. விரல்களையும் அதில் ஓடிச் சிவந்திருக்கும் ரேகைகளையும் பார்த்தால் மஞ்சள் கிழங்குகளைப்போல் இருக்கும். அவளுடைய அழகுக்கு ஒரு உலகத்தைக்கூட நாசமாக்க எந்த அரசனும் தயங்கமாட்டான்.

ஒருநாள் இரவு ஒன்பது மணி இருக்கும். அரண்மனையின் உட்புறமாக உள்ள குளத்தோரம் நிலா வெளிச்சத்தில் வலங்கைப் புலித்தேவர் உட்கார்ந்துகொண் டிருந்தார். பக்கத்தில் படுத்திருக்கும் வேட்டை நாயை அவரும் பொன்னம்மையும் ஒருவர் மாற்றி ஒருவர் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்.

"மகாராஜா......"

"யாரது?"

நிமிர்ந்து வெளியே பார்த்தார் ஜமீன்தார். பொன்னம்மை எழுந்து உள்ளே போய்விட்டாள்.

"* நாலுவாசங் கோட்டையிலிருந்து மகாராஜாவைத் தேடி ஒரு ஆள் வந்திருக்கிறது"

---

* நாலுவாசல் கோட்டையை நாலுவாசங்கோட்டை என்று வழங்குவார்கள்.

"வரச்சொல்"

சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே ஒரு கிழவன் உள்ளே வந்தான். நாலுவாசல் கோட்டை ஜமீன்தார் அனுப்பிய தூதுவன்.

"என்னடா சமாச்சாரம்?" என்று எழுந்தார் ஜமீன்தார். பக்கத்தில் நின்ற தம் சேவகனை வெளியே போகச் சொல்லி விட்டார்.

"மகாராஜாவிடம் சொல்லச் சொல்லி எங்கள் சமஸ்தானத்திலிருந்து சொல்லிவிட்ட சமாச்சாரம் இது......"

சுற்று முற்றும் பார்த்துக் கொண்டான்.

"திண்டுக்கல்லிலிருந்து வந்து ஸ்ரீ வில்லிபுத்தூரில் பட்டாளத்தோடு கூடாரம் அடித்து இருக்கிறானாம் நவாப். நாளை நின்று இங்கே சமூகத்திலே வந்து, கடைசித் தடவையாக மகாராஜா குழந்தையைப் பெண் கேட்கப்போவதாகவும் இல்லாவிட்டால் சண்டைக்கு........."

அதுவரையும் ஜமீன்தார் பொறுக்கவில்லை. "பேடிப் பயல் ........சரி, நீ போகலாம். கொஞ்சநேரம் கழித்துச் சமாச்சாரம் சொல்லி அனுப்புகிறேன்." என்று சொல்லிவிட்டு விறு விறு என்று அரண்மனைக்குள் நுழைந்தார். கண்கள் கோவையாகச் சிவந்து விட்டது. என்றுமில்லாதவாறு அவருடைய மீசை துடித்தது.

"ஐயா, என்ன விஷயம்?" என்று நடுக்கத்தோடு வந்து கேட்டாள் பொன்னம்மை. அவள் முகம் வெளுத்துப் போயிருந்தது.

"உள்ளே போ" என்று காரணமில்லாமல் சீறி விழுந்தார் ஜமீன்தார். பொன்னம்மையின் தலை கவிழ்ந்து விட்டது. ஒன்றும் பேசாமல் உள்ளே போய் விட்டாள்.

*  *  *  *

துரைப் பாண்டியன் அரண்மனைக்குள்ளே வந்தான். குதிரை மாதிரி கட்டுவிடாத சரீரம். அவன் ஓட்டமும் நடையுமாக வந்தது பொன்னம்மைக்கு மேலும் ஆவலைக் கிளப்பி விட்டது. அன்று அரண்மனைக்குள் ஒரு குழந்தையின் காலடி ஓசையைக் கேட்டாலும் அவளுக்குப் பீதியாக இருந்தது மெத்தையின் முகப்பில் அவள் நின்று கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்ட துரைப் பாண்டியன் மாடிப் படிகளின் வழியே மேலேறிப் போனான்.

"துரைப் பாண்டி, என்ன விசேஷம்?" என்று ஓடிவந்து அவன் கால்களைப் பிடித்துக்கொண்டாள் பொன்னம்மை.

"எல்லாம் உன்னால் தான்" என்று சொல்லி ஒரு மலையை அவள் மீது தள்ளினான்.

இடி விழுந்ததுபோல் பேச்சு மூச்சற்றுப் போனாள் பொன்னம்மை. அவள் இருதயத்தைப் போல் உதடுகளும் துடித்தன.

"பயப்படாதே எழுந்திரு. அப்படி ஒன்றும் வந்துவிட வில்லை" என்று அவள் கைகளைப் பிடித்து மேலே தூக்கினான். இருவரும் ஓரிடத்தில் உட்கார்ந்தார்கள். பனி மூடிய நிலாவின் வெளிச்சம் எண்ணெய் மக்காக இருந்தது. இருவரையும் ஏதோ ஒரு ரகசிய உலகத்தில் அடைத்த மாதிரி அந்த நிலாப் போர்வை மூடிவிட்டது.

"பொன்னு, உங்கள் தகப்பனாருக்கு நாம் இரண்டு பேரும் செல்வப் பிள்ளைகளாக இருந்த பாக்கியம் இன்றோடு சரி......பயப் படாமல் சொல்வதைக் கேள்......"

அவனுடைய கையை இறுகப் பிடித்துக் கொண்டாள் பொன்னம்மை.

நம் இருவருக்கும் இந்த மாதக் கடைசியில் கல்யாணம் நடத்துவதாக இருந்த பிரஸ்தாபம் நவாப் வரைக்கும் எட்டிவிட்டது. அந்தக் கிராதகன் இதுவரை சுமார் பத்துத்தட்வை உன்னை அபகரித்துக் கொண்டு போகப் பார்த்தான்......"

பொன்னம்மை மிகவும் பயத்தோடு நடுங்கினாள்.

"ஏன் பயப்படவேண்டும்? உனக்கு இதுவரையும் அவன் பெண் கேட்ட சமாச்சாரத்தைச் சொல்லவில்லை. அவன் நாளை நின்று இங்கே வரப் போகிறானாம், உன் தகப்பரின் சம்மதத்தைக் கேட்க். சம்மத மில்லையென்றால் சண்டைதான்......ஆனால் அதற் கெல்லாம் ஒரு மறவனும் பயப்படப் போவதில்லை"

அவளுடைய முகம், துரைப்பாண்டியன் முகத்திற்குச் சாயல் காட்டுவது மாதிரி கோபத்தால் சிவந்தது. அழகுக்கு ஏற்றபடி, தான் பிறந்த குலத்தின் வீரமும் அவள் முகத்தில் கனல் கக்கியது. அந்தக் கோப அலை ஓய்ந்ததும் அவள் மனம் சற்று நெகிழ்ந்து விட்டது.

"நான் ஒருத்தி இங்கே இருக்கப்போய்த் தானே இந்தச் சண்டை கச்சர வெல்லாம்? என்ன துரைப் பாண்டி, பேசாமல் இருக்கிறாய்......?"

"உம்..."

"நாம் இருவரும் இப்போதே எங்காவது ஓடிப் போய் விட்டால்?"

"ஓச்சீ"

அவனுடைய குரல் அந்தக் கட்டடத்தையே பிளந் தெறிவது போல் இருந்தது.

"இந்தச் சண்டைக்கெல்லாம் பயந்து ஓடி அப்புறம் காலங் கழிக்கவா? ஏதோ ஏழாயிரம் சிப்பாய்களோடு வருகிறானாம். நம்முடைய மூன்று ஜமீன்களும் சேர்ந்தால் ஒரு ஏழாயிரந்தானா? ஒன்று வெற்றி கிடைத்தது என்றிருக்கட்டும். இல்லாவிட்டால்

மானத்தோடு இந்த உயிரைச் சண்டை முகத்திலேயே விட்டு விடுவது''

"அப்புறம் என் கதி என்ன, துரை? அதைவிட ஒரு தொல்லையும் இல்லாமல் நானே இப்போது கிணற்றில் குதித்து விடுகிறேனே. பிறகு நவாப் என்ன செய்வான் பார்க்கலாம்?''

"மாறி மாறி நாம் தோற்றுப் போகும் எண்ணம் தான் உனக்கு உண்டாகிறதோ? பெண்பிள்ளை தானே'' என்று சிரித்தான் துரைப்பாண்டியன். இது பொன்னம்மைக்குச் 'சுருக்' கென்று தைத்தது. கடைசியில், சண்டையில் ஏதாவது ஒன்று ஆய்விட்டால் தன் உயிரை மாய்த்துக் கொள்வது என்ற முடிவுக்கு வந்துவிட்டாள்.

அன்று இரவு வெகுநேரம் வரைக்கும் அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். துரதிர்ஷ்டவசமாக ஒன்றும் நேராமல் இருந்தால் அதைப்போன்ற எத்தனையோ இன்பகரமான இரவுகளை அவர்கள் கழிக்கலாம்.

தங்களுடைய வாழ்க்கை இன்பத்தையே அந்த ஒரே இரவில் இருவரும் துய்த்துவிட வேண்டும் என்ற படபடப்பு. ஒருவருக்கொருவர் பேசவே முடியவில்லை. எதைப் பேசுவது? மரங்களில் இலைகூட அசையாத அந்த மோனத்தோடு இருவரும் கலந்து விட்டார்கள்.

ஈஸ்வரன் கோவிலில் அர்த்தஜாமப் பூஜையின் மணி அடித்தது. நேரமாய்விட்டது என்று பொன்னம்மையின் பிடிப்பை விட்டு எழுந்தான் துரைப்பாண்டியன். நடுஜாமத்திற்கு அவனைத் தம் மிடத்திற்கு வரும்படி சொல்லி இருந்தார் ஜமீன்தார். சாமலை ஜமீன்தாரையும், நாலு வாசல் கோட்டை ஜமீன்தாரையும் அப்போதே வரவழைத்திருந்தது.

"எங்கே எழுந்து விட்டாய்?''

"ஐயா வரச் சொல்லி இருந்தார்கள் இந்த நேரத்துக்கு. போய் வரவேண்டும், விடு.''

விஷயம் எல்லாம் தெளிவாகத் தெரிந்த பிறகும் ஏதோ மர்மம் இருப்பதுபோல் பொன்னம்மைக்குத் தோன்றியது.

"துரை, இதோ பார். நீ எதற்கும் அஞ்சாத ஆண்பிள்ளையென்றால் உனக்கு அடிமைப்பட்ட என்னை முதலில் கொன்றுவிட்டு நீ சாகவேண்டும். அடுத்தவன் கையில் இந்த உயிர் போகக்கூடாது'' என்று வாய் குழறிக்கொண்டே சொன்னாள். துரைப்பாண்டியனின் கைப்பிடியை விடவே இல்லை.

"இந்தமாதிரி நினைக்காதே. எல்லாம் நல்லதாக முடியும்'' என்று சொல்லி விட்டுப்போய் விட்டான்.

* * * *

மூன்று ஜமீன்தார்களும் ஒரே முடிவுக்கு வந்து விட்டார்கள். காலை கோழி கூப்பிடும் நேரம் வரை ஆலோசித்த பின் அந்த முடிவுதான் சரியாகப் பட்டது.

நவாப்பிடம், பயிற்சி பெற்ற பட்டாளம் இருந்ததோடு துப்பாக்கியும் இருந்தது. அதுவும் தவிர இந்தப் பழங்கோட்டையை விட எவ்வளவோ பெரிய ஜமீன்களை நொடிப்பொழுதில் தகர்த்தெறிந்தவன். எப்படியும் சண்டை செய்து மடியலாம் என்றாலும், பொன்னம்மையின் நிலையைக் கவனிக்கையில் திகைப்பாக இருந்தது. வெற்றி கிடைத்துத் துரைப்பாண்டியனும் மீண்டு விட்டால் ஒன்றுமில்லை. அவன் இறந்தபின் வெற்றி கிடைத்தும் பயனில்லை. எல்லோருமே ஒருவேளை மடிய நேரிட்டால் அந்தப் பேதையின் கதி என்னவாகும்? அரவமில்லாமல் அவளை எடுத்துக்கொண்டு போய்விட்டால்? இப்படி மானம் பறிபோவதை நினைக்கையில் வேறுவிதமான முடிவுக்கு வர முடியவில்லை. மற்ற இரண்டு ஜமீன்களில் கொண்டுபோய் ஒளித்து வைத்தாலும் நவாப் யாரையும் இம்சிக்காமல் விடப் போவதில்லை.

ஒரே முடிவுதான். மறுநாள் ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு ஒரு தூதுவனை விட்டுப், 'பொன்னம்மையைக் கொடுக்கப் போவதில்லை' என்று ஊக்கமாகத் தெரிவித்து விடுவது. அதோடு ஊரின் வடபுறம் உள்ள குன்றின் உச்சியில் ஒருவனை முரசோடு நிறுத்தி வைத்து எதிரிகளின் படை நிலா வெளிச்சத்தில் தெரிந்தால் அந்த முரசை உரக்கக் கொட்டச் சொல்லவேண்டியது. உடனே பழங்கோட்டையின் கோட்டைக் கதவை மூடி அந்தக் கதவின் ஓசையால் மற்ற இரண்டு ஜமீன்களுக்கும் விஷயத்தைத் தெரியப்படுத்திவிட வேண்டும். ஏககாலத்தில் குழந்தை குட்டிகள் ஒருவரையும் பாக்கி விடாமல் மூன்று ஜமீன்தார் குடும்பங்களையும் அவரவர்களே வாளுக்கு இரையாக்கி விடவேண்டியது.

இந்தப் பயங்கரமான முடிவைத் தவிர்த்து வேறு வழி தோன்றவில்லை. பேசி முடிந்ததும் இரவோடு இரவாக விழித்துக் கிடக்கும் பொன்னம்மையின் இருப்பிடத்தை நோக்கிச் சென்றான் துரைப்பாண்டியன்.

* * * *

மறுநாள் இரவு, நல்ல நிலா. முதல்நாளைப்போல் மங்கலாக இல்லை. சுமார் நாலைந்து மைல்களுக்கு அப்பால் நவாபின் பட்டாளம் வந்தாலும் அந்தக் குன்றின் உச்சியிலிருந்து கண்டு பிடித்து விடலாம். அந்தி மயங்கும் நேரத்திலேயே அனுப்பப்பட்ட வேலைக்காரன் முரசோடு குன்றின் உச்சியில் வடக்கு நோக்கி நின்று கொண்டிருந்தான்.

ஊருக்குள்ளே ஒரு அரவமும் கிடையாது. சமஸ்தானத்து உத்தரவுப்படிக்கு வெகு சீக்கிரத்திலேயே அன்று ஊரடங்கி விட்டது. யாரும் தம் வீட்டுக்கதவைக் கூடப் பலமாகச் சாத்தக் கூடாதென்பது உத்தரவு. முரசொலி தெளிவாகக் கேட்கவேண்டும் என்பதற்காக் இவ்வளவு ஏற்பாடும்.

நிச்சயமாகச் சாவது என்று ஏற்பாடாகி விட்டது. மரணத்தின் வாயிலில் மணிக்கணக்காக நின்று கொண்டிருந்தால் வீரனிடம் 'கூட கோழைத்தனமும் பயமும் பிறந்துவிடும். க்ஷணப் பொழுதில் எழுந்து வீழ்வதுதானே வீரமெல்லாம்? பொன்னம்மை அழுத கண்ணீர் மாருமல் அழுதுகொண்டு நின்ருள். துரைப் பாண்டியன் சில சமயங்களில் தேற்றுவான். சில சமயங்களில் அவன் மனமும் முறிந்துவிடும். பயம் கூட உண்டாகும். ஏனென்ருல் யாதொரு நம்பிக்கைக்கும் இடமில்லாமல் சாவது என்ற முடிவுக்கு வந்தாய்விட்டது அல்லவா? வெகு நேரம் இந்த வேதனையைச் சகிப்பதைவிட அந்த எதிரியாவது சீக்கிரம் வர மாட்டாஞ என்று தவித்த வண்ணம் ஒருவரை ஒருவர் ஆதரவாகப் பிடித்துக் கொண்டார்கள். பக்கத்திலே நிலவில் பிரகாசித்துக் கொண்டிருக்கும் வாள்மீது காற்றில் ஆடும் தென்னை ஓலையின் நிழல் விழுவது மேலும் மேலும் அந்த வாளைத் தீட்டி விடுவதுபோல் இருந்தது.

நடு ஜாமமும் கடந்து விட்டது. ஒரே நிசப்தம்...இல்லை, திடீரென்று "டமடம" என்று தொடர்ச்சியாக முரசின் சப்தம் கேட்டது. அவ்வளவுதான். 'டமார்' என்ற கோட்டைக் கதவுகளின் இடியோசை. எல்லாம் ஒரே க்ஷணத்தில்! ரத்தவெள்ளத்தை அரண்மனைச் சுவர்தான் அணைகட்டித் தடுத்தது. வெட்டுண்ட துண்டங்கள் மானத்தின் உருவங்களாகச் சிதறிக் கிடந்தன......

வெகுநேரம் கழிந்துவிட்டது. பயபீதியாக நடுங்கிக் கொண்டிருந்த ஊராரெல்லாம் நவாபின் படைகளைக் காணுது திகைத்தார்கள். அதுதான் சமயம் என்று அநேகர் கிழக்கு நோக்கி ஓடிவிட்டார்கள். முரசொலி கேட்டு அவ்வளவு நேரமாகியும், பகைவன் வராத காரணத்தை ஒருவராலும் யூகிக்க முடியவில்லை. குன்றின் மேல் ஏறிப் பார்க்கலாம் என்று ஒன்றிரண்டு பேர்கள் ஓடிஞர்கள். இதென்ன? குன்றின் அடிவாரத்தில் முரசு கிடந்தது. எல்லாம் ஒரே திகைப்பா?

பட பட்ப்போடு குன்றின் உச்சிக்கு ஏறிஞர்கள். மேலே போய்ப் பார்க்கையில், முரசு வைத்திருந்த வேலைக்காரன் குறட்டை விட்டு உறங்கிக் கொண்டிருந்தான்! சந்தேக மில்லாமல், உறங்கும் போது அவனுடைய கால் தட்டித்தான் முரசு சத்தமிட்டுக் கொண்டே கீழே உருண்டிருக்க வேண்டும். மற்றப்படி நவாபின் சேனைகள் ஒன்றும் வரவில்லை.

பாவம்! அவனுடைய இந்த அற்ப உறக்கமானது என்றென்றைக்கும் மீளாத ஒரு உறக்கத்துக்குக் காரணமாய்விட வேண்டும் என்ரு இருக்கிறது?

* * * *

அஸ்தமிக்கத் தொடங்கி விட்டது. ஒரு பெரு மூச்சோடு எழுந்து இருவரும் கழுகுமலையை நோக்கி நடந்தோம்.

# ஜீவஜோதி ★

தாகூரிலிருந்து
மொழிபெயர்த்தவர்
(கர்மயோகி)

ஒரு பேனுவைப்பற்றித் தெரிவதை வெகு சுலபமான நடையில் கூறி விடுவேன். அது என்னுல் முடியும். ஆனுல் அப் பேனுவின்'சக்தி'யை அவ்வளவு எளிதில் கூறிவிட முடியாது.

ருசியும், அனுபவமும், ரஸிகத்தன்மையும் வேண்டும். அது சொற்களை மீறிய, உணரக்கூடிய இன்பம். அது அனுபவத்திற்கு மட்டுமே இயலும். கவிதையைக் கற்பனைச் சித்திரங்களாக மனக்கண் முன் வருவிக்கக்கூடிய பாஷையில் மட்டும் எழுதவேண்டும் என்பது பல அறிஞரின் முடிவு.

தினசரி வாழ்க்கையில் நம்முடைய சிறிய காரியங்களில் நமது வார்த்தைகள் மிகவும் தயக்க மடைந்து நெளிய ஆரம்பித்து விடுகின்றன. ஏனெனில் நமது ஜீவநதியின் ஓட்டம் அப்போது மிகவும் குறைந்திருக்கிறது. ஆனுல் நம்முடைய ஹிருதயம் காதலிலோ, மற்ற பெரிய உணர்ச்சிகளிலோ பரிபூரணமாக விரிவடையும்போது ஜீவஓட்டம் பெரு வெள்ளமாகவும் பெருக்கெடுத்தும் உருண்டோடுகிறது. அச் சமயத்தில் நம்மால் பேசாமலிருக்க முடியாது. சும்மாவாவது பேசத்தான் செய்வோம். இந்த நிலைமை தான் சர்வகலைகளுக்கும் உற்பத்தி ஸ்தானம். 'கலைகளால் காசு பெற முடியுமா?' 'கலைகளால் என்ன பிரயோஜனம்' என்ற கேள்விகளுக்கெல்லாம் அங்கு இடமில்லை.

நமது உணர்ச்சிக் கோபுரங்கள் நட்சத்திரங்களை முத்தமிட்டு தாவுகின்றன. நமது சங்கீதக்கானம் அளக்க முடியாத ஆழியெல்லாவற்றையும் பார்க்கின்றன.

*　　*　　*　　*

என்னுடைய ஹிருதயம் காதலால் நிரப்பப்பட் டிருக்கும் போது சூரிய சந்திரர்கள் முன்னைக் காட்டிலும் அதிகமான தண்மையோடும் ஒளியோடும் உலகத்தின் உயிரும் என் உயிரும் ஒன்று என்று போதிப்பதை நான் கேட்ட தில்லையா?

மேகங்களின் வரவைப் பற்றி நான் பாடும்போது பூமியில் தத்தடிக் கொட்டும் மழை தனது சோக்த்தின் சாயையை என்னுடைய கவியிலே கண்டது. மானிட ஜாதியின் சரித்திரத்தின் ஆரம்பம் முதல் கலைஞர்களும் கவிஞர்களும் தங்களுடைய ஜீவகளையை உலகத்தின் வாழ்க்கையில் போட்டு இழைத்துள்ளனர்.

இதிலிருந்து நான் உண்மையை உணர்கிறேன். என்னவென்னில் வையகமும் வானகமும் மனித அறிவினுலேயே ஆக்கப்பட்டுள்ளது. இவ்வறிவு தான் பரம அறிவு. அவ்வறிவின் பிரதிபலிப்புதான் இங்கு இயலும் காட்சியும் கானமுமாகும். கடவுள் பாடுகிருர். ஆம் பாட்டுப் பாடுகிருர். பாட்டு அவருடையது தான். சந்தேகமில்லை. ஆனுல் அந்தக் கற்பனைக் கீதங்களை வெளிப்படுத்துவது நமது ஹிருதய கமலங்களான குழல்களல்லவா?

**படித்தவர்கள், படியாதவர்கள், எல்லோரும் ரேகை சாஸ்திரம் பார்க்கிறார்கள். ரேகை சாஸ்திரத்தில் நம்பிக்கையற்றவர்களுக்கும் கூட அதைப் பார்க்கவேண்டும்போல் தோன்றுகிறது. அப்படிப்பட்ட சர்வஜன விருப்பமான ரேகை சாஸ்திரத்தை விளக்கமாகத் தொடர்ந்து எழுத முன் வந்துள்ளார் ஸ்ரீமதி-ஜி. பி. எல்.**

# ரேகை சாஸ்திரம்

G. B. L



நம் வாழ்க்கையில் ஏற்படும் சுக துக்கங்களை அறிந்து கொள்ள "ரேகை சாஸ்திரம்," "ஜோதிடம்," என்ற இரண்டு முக்கிய நூல்கள் உள. இவைகளினால் இறந்த கால, நிகழ்கால பலன்களை அறிய இயல்வதுடன், எதிர்கால பலன்களையும் அறிய முடியும்.

ரேகை சாஸ்திரம் நம் அங்கங்களின் அமைப்புக்குத் தகுந்தாற்போலும், அவைகளில் உள்ள ரேகைகளுக்குத் தகுந்தாற்போலும், பலன்களைத் தெரிவிக்கும் நூல்.

ஜோதிடம் என்பது ஜாதகத்திற்கு, அதாவது நாம் பிறந்த நேரத்திற்குத் தகுந்தாற்போல் பலனை அறிவிக்கும் நூல். இவ்விரண்டிற்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு. அவைகளில் இப்பொழுது "ரேகை சாஸ்திரத்" தைப் பற்றிக் கவனிப்போம்.

நாம் ரேகைகளின் பலன்களை அறிந்து கொள்ள எல்லா ரேகைகளையும், எல்லா அங்க அமைப்புகளையும் நன்கு ஆராய்ச்சி செய்த பிறகே பலன்களை நிர்ணயிக்க வேண்டும்.

ரேகைகளை ஆராய்ச்சி செய்வதற்கு முன், அதிக வெளிச்சமிருக்கும் இடத்தில் உட்கார்ந்து நிதானமாக எல்லா ரேகைகளையும், (புருஷர்களுக்கு வலது கையிலும், பெண்களுக்கு இடது கையிலும்) ஆராய்ந்து பலன்களைத் தெரிந்து கொள்ளவேண்டும்.

ரேகை சாஸ்திரத்தை இரண்டு முக்கிய பிரிவுகளாக பிரிக்கலாம். 1. ஹஸ்த சாமுத்திரிகம். 2. அங்க சாமுத்திரிகம்.

**ஹஸ்த சாமுத்திரிகத்தை** மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. மணிக் கட்டிலுள்ள ரேகைகள். 2. உள்ளங்கை ரேகைகள். 3. விரல்களிலுள்ள ரேகைகள்.

### மணிக்கட்டு ரேகைகள்.

இந்த ரேகைகளுக்குக் "கங்கண ரேகைகள்" என்று மற்றொரு பெயருண்டு. மணிக்கட்டில் ஒரு ரேகையிருந்தால், 25 வயதென்றும் 2 ரேகைகள் இருந்தால் 50 என்றும், 3 ரேகைகள் இருந்தால் 75 என்றும், 4 ரேகைகள் இருந்தால், பூர்ணயுளுடையவனென்றும் தெரிந்து கொள்ளவேண்டும். மணிக்கட்டு ரேகை

கிளே மாத்திரம் ஆராய்ச்சி செய்து ஆயுளை நிர்ணயிப்பதில் சில சமயங்களில் தவறுதல்கள் ஏற்படும். ஆகையால், ஆயுள் ரேகையையும் அநுசரித்து ஆயுளை நிர்ணயிக்க வேண்டும். ஆயுள் ரேகையைக் குறித்துப் பிறகு ஆராய்வோம்.

மணிக்கட்டில் 3 ரேகைகள் நன்கு பதிந்திருந்தால், ஆரோக்கியமும், ஐஸ்வர்யமும், அதிருஷ்டமு முடையவனாக இருப்பான். கங்கண ரேகைகள். எவ்வளவு நன்ருகப் பதிந்திருக்கின்றனவோ, அவ்வளவு ஆரோக்கிய முடையவனாக இருப்பான். கங்கண ரேகைகள் கொஞ்சமேனும் தெரியாவிடில் எப்பொழுதும் வியாதி உடைய்வனாகவும், வீண் செலவுகள் செய்பவனாகவும், இருப்பான். கங்கண ரேகைகளில் முதல் ரேகை சங்கிலிப்போல் பின்னிக் கொண்டிருந்தால், கஷ்ட ஜீவனத்தையும், பலஹீனத்தையும் குறிக்கும். அதில் குறுக்கு ரேகைகள் இருந்தால், கஷ்ட ஜீவனமானாலும், தனத்தைச் சம்பாதித்து நிம்மதியாக ஜீவிப்பான். கங்கண ரேகைகளின் கிளைகள் உள்ளங்கையை நோக்கிச் சென்றிருந்தால், சுக ஜீவன முடையவனாக் இருப்பான். மணிக்கட்டில், கோணங்களைப்போல் ரேகைகள் இருந்தால், பூர்வார்ஜித சொத்துக்கள் உடையவனாக் இருப்பான். தனரேகை பிறக்கும் இடத்தில் மணிக்கட்டு ரேகைகள் வெட்டப்பட்டு அத்துடன் சேர்ந்தால் பொய் பேசுபவனாகவும், டாம்பீகனாகவும், இருப்பான். மணிக்கட்டு ரேகைகளின் நடுவில் புஷ்பத்தைப்போல் ரேகை யிருந்தால் அதிருஷ்டமுடைய்வனாக்வும் தனாதிபதியாகவும் இருப்பான். மணிக்கட்டிலிருந்து புதஸ்தானம் வரை ரேகை நீண்டு இருந்தால் அகஸ்மாத்தாகப் புதையல் கிடைக்கும். மணிக்கட்டில 4 ரேகைகள் இருந்தால், ஜமீன்தாராகவும், 3 ரேகைகள் இருந்தால், அதிக போகமுடையவனாக்வும், 2 ரேகைகள் இருந்தால், சம்சார சுக துக்கங்கள் உடைய்வனாகவும், ஒரு ரேகை இருந்தால், யோகியாகவும் இருப்பான். கங்கண ரேகைகள் சந்திர மேட்டில் பரவி இருந்தால், அதிகப் பிரயாணம் செய்ய நேரும்.




1. மணிக்கட்டு ரேகைகள்
2. தனரேகை
3, ஆயுள் ரேகை
4. புருஷ ரேகை
5. ஸ்திரீ ரேகை
6, புதஸ்தானம்
7. சந்திரஸ்தானம்

(தொடரும்)

வதந்தி என்ற சொல் அதிகமாக அடிபடுகிறது. வதந்தியை வேகமாய்ப் பரப்பிய ஒரு சாதனத்தைப் பற்றி நந்தேனியல் ஹாத்தார்ண் எழுதிய ஒரு தமாஷான கதை இது..........

# டாமினிகஸ் பைக்

**தா. மா.** அப்பாவு மொழிபெயர்த்தது



ஒரு வாலிபன் - அவன் ஒரு புகையிலை வியாபாரி - மோரிஸ்டன் நகரிலே குடியேறிய ஷாக்கர் மக்களிடையே வியாபாரம் செய்தான். பிறகு, சால்மன் நதிக்கரையி லிருந்த பார்க்கர் வீழ்ச்சி என்னும் கிராமம் நோக்கிச் சென்றுகொண் டிருந்தான். அவனுக்குப் பச்சை நிறம் தீட்டிய வண்டி யொன் றிருந்தது. அதன் இருபுறங்களிலும் புகையிலைப் பெட்டிகள் தொங்கின. முன் பக்கத்திலே இந்தியத் தலைவனின் படம் ஒன்று குடலோடும் தங்கச் சுங்கானேடும் இருந்தது. அவன் அழகிய குதிரை யொன்றை ஓட்டிக்கொண் டிருந்தான். வியாபாரத்திலே கருத்தாய் இருந்த அவனுக்கு வசீகரத் தோற்றமும் அமைந் திருந்தது. மழுங்கியதை விடக் கூரிய கத்தியால் மயிர் களைய விரும்பும் அமெரிக்கர்கள் வெறுக்கும் குணம் ஒன்று கூட அவனிட மில்லை. கோனிகட் சுற்றுப் புறங்களி லிருந்த அழகிய யுவதிகள் அவனை நேசித்தனர். அவன் தன்னிட மிருந்த உயர்ந்த புகையிலையை அவர்களுக்கு வெகுமதி யளிப்பான். புதிய இங்கிலாந்தின் பெண்கள் புகை பிடிப்பதில் கொண் டிருந்த அபாரப் பிரியம் அவனுக்குத் தெரியும். அதோடு, இந்தக் கதையில் நான் விவரிக்கப் போகிறபடி அவன் பெரிய அரட்டைக்காரனு யிருந்தான். புதிய செய்திகளைக் கேட்டு அவற்றைப் பரப்புவதி லிருந்த ஆர்வம் அவனைக் குறு குறுக்கச் செய்தது.

மோரிஸ்டனில் காலை யுணவிற்குப் பின், டாமினிகஸ் பைக் என்ற அந்தப் புகையிலை வியாபாரி, ஏழு மைல் சென்று ஒரு சிறிய ஏகாந்த வனத்தைக் கடக்கவேண்டிய வரையிலே; தனக்குள்ளும், வெள்ளைக் குதிரையிடமும் பேசியதைத் தவிர, வேறு யாரிடமும் பேச முடியவில்லை. அது காலை ஏழு மணி யானதாலே, நகரக் கடைக்காரர்கள் காலைப் பத்திரிகையைக் காண ஆவல் கொள்ளுவதைப் போல அவனும் அரட்டை யடிக்க ஆசை கொண்டான்.

அவன் குன்றொன்றின் அடிவாரத்திலே தன்னுடைய பச்சை வண்டியை நிறுத்திவிட்டு, சுருட் டொன்றைப் பற்ற வைத்துக்கொண்டு நின்றபோது அதற்கு வாய்ப்பு ஒன்று கிட்டியது. குன்றின் மேலிருந்து மனிதன் ஒருவன் வருவதை அவன் பார்த்தான். தோளின் மேலிருந்த தடியொன்றின் நுனியிலே பெரிய கட் டொன்றைத் தூக்கிக்கொண்டு அந்த மனிதன் அசைந்து வரலானன். ஆனல் அவன் உறுதி நிறைந்த-நடையோடு பிரயாணம் செய்வதை டாமினிகஸ் கவனித்தான். அவன் காலையின் புதுமையிலே பயணந் தொடங்கியவனைக் காணவில்லை. ஆனல் இரவு முழுதும் நடந்து பகலெல்லாம் நடக்க உறுதி கொண்டவனுகக் காணப்பட்டான்.

பேச்சுத் தூரத்துக்குள் வந்தவுடன், "தோழனே, காலை வணக்கம்!" என்றான் டாமினிகஸ், "நீ மிகுந்த தூரம் போகிறாய். பார்க்கர் வீழ்ச்சியில் நிகழ்ந்த கடைசியான செய்தி என்ன?"

அந்த மனிதன் வெள்ளைத் தொப்பி முன் அகண்ட ஓரங்களை இழுத்து விட்டுக் கொண்டே, மங்கிய குரலில் தான் பார்க்கர் வீழ்ச்சியி லிருந்து வர வில்லை என்று சொன்னான். வியாபாரி தன் பிரயாணத்தின் முடி வெல்லை யாகிய அவ் வூரைக் கொண்டு தன் கேள்வியை ஆரம்பித் திருந்தான்.

டாமினிகஸ் தொடர்ந்தான், "நல்லது; நீ புறப்பட்ட இடத்தில் நிகழ்ந்த கடைசியான செய்தியைச் சொல். பார்க்கர் வீழ்ச்சியை நான் குறிப்பாகக் கொள்ளவில்லை. எந்த இடமானாலும் சரி!"

அவ்வாறு தூண்டப்பட்ட அந்தப் பிரயாணி - அவன் வனத்தில் தான் சந்திக்கத் தகுதியுள்ளவன் - நினைவு மூட்டிக் கொள்ளவோ அல்லது தான் சொல்லப் போகும் விஷயத்தை எடையிடவோ சிறிது தயங்கினான். கடைசி யாக வண்டிப் படியின் மீதேறி, டாமினிகஸின் காதிலே முணகினான். அவன் கத்தி யிருந்தால் கூட அந்தத் தனித்த இடத்திலே கேட்டிருக்க முடியாது.

"சிறிய செய்தி யொன்று எனக்கு நினைவு வருகிறது" என்று அவன் சொன்னான். "சிம்பால்டனி லிருக்கும் வயதான ஹிக்கின்பாதம், நேற்று இரவு எட்டு மணிக்கு தன்னுடைய தோட்டத்திலே ஒரு ஐரிஷ்காரனாலும் நீக்கிரோவாலும் கொல்லப்பட்டார். அவர்கள் அவரை மைகேல் மகானின் பியர் மரத்திலே தொங்கவிட் டிருக்கிறார்கள். விடிகிறவரையிலே யாரும் அதைக் கண்டு பிடிக்க முடியாது."

இந்தக் கொடுமையான செய்தி கூறப்பட்ட வுடனே, அந்த அன்னி யன் எழுந்திருந்து முன்னைவிட வேகமான நடையோடு பிரயாணம் தொடங் கினான். டாமினிகஸ், ஸ்பானிஷ் சுருட் டொன்றைத் தந்து மேலும் விவரங் களைச் சொல்ல வேண்டு மென்று அழைத்தும் அவன் திரும்பிப் பார்க்கவே யில்லை. வியாபாரி சீட்டி யடித்துக் கொண்டே தன்னுடைய குதிரையைக் குன்றின் மேலே செல்லும்படி தட்டி விட்டான். தன்னுடைய வியாபார மூலம் பழகி யிருந்த ஹிக்கின்பாதத்தின் பரிதாப முடிவைப் பற்றி அவன் சிந்தித்துக் கொண் டிருந்தான்.

அந்தச் செய்தி பறந்த வேகத்தைக் கண்டு வியந்தான். நேர்கோ டிழுத் தால் கூடும் பால்டன் அறுபது மைல் தூர மிருக்கும். முந்திய இரவில் எட்டு மணிக்குத் தான் கொலை நடந் திருக்கிறது. அப்படி யிருந்தும் காலை ஏழு மணிக்கு டாமினிகஸ் அதைத் தெரிந்து கொள்ள முடிந்திருக்கிறது. பாவம்! ஹிக்கின்பாதத்தின் எளிய குடும்பம் பியர் மரத்திலே தொங்கும் சவத்தை இப்போது தான் கண்டிருக்கும். அந்த அன்னியன் இவ்வாறு வேகமாய்ச் செல்ல ஏழு காத தொலைவு செல்லும் செருப்பைத் தரித்திருக்க வேண்டும்!

"கெட்ட செய்தி விரைவாகப் பரவுகிறதென்று சொல்லுகிறார்கள்." என்று அவன் எண்ணினான். "ஆனால் இது ரெயில் பாதையையும் தோற் கடிக்கின்றது. ஜனாதிபதியின் செய்தியைக் கொண்டு செல்லும் மெயில் வண்டியாக இந்தப் பயல் அமர்த்தப்பட் டிருக்கவேண்டும்!"

செய்தி சொன்னவன் ஒரு நாள் தவறிச் சொல்லி யிருக்கவேண்டு மென்று அவன் சமாதானம் செய்து கொண்டான். ஆனால் வழியிற் கண்ட சத்திரங்களில் எல்லாம் இதைப் பரப்ப அவன் தயங்கவே இல்லை. கேட்டுத் திடுக்கிட்டவர்களில் இருபது பேருக்கு மேல் ஸ்பானிஷ் சுருட்டின் பெரிய கட்டொன்றை விற்றான். அந்தச் செய்தியைக் கொண்டு வந்தவன் தான்

ஒருவனே என்று அவன் கண்டபோது கேள்விகளுக்குச் சமாதானமாகச் சரடுவிட அவனுக்குத் தைரியம் பிறந்தது. அவனுக்குச் சாதகமாக சாக்ஷியம் ஒன்றும் கிடைத்தது. ஹிக்கின்பாதம் ஒரு பணக்காரன். அவன் தினமும் இரவிலே தனது பையிலே பணத்தையும் விலை யுயர்ந்த காகிதங்களையும் எடுத்துக் கொண்டு தோட்டத்தின் வழியாய் வீட்டிற்குப் போவதுண்டு. இதை அவரது பழைய குமாஸ்தா ஒருவனிட மிருந்து தெரிந்துகொண் டிருந் தான். ஹிக்கின் பாதத்தின் கொலைக்காக அந்தக் குமாஸ்தா சிறிது வருந்தி ஞன். அவரது சொத்து, கிம்பால்டனில் பள்ளிக்கூடம் வைத்திருந்த அவரது அழகிய மருமகளுக்குப் போய்ச் சேரும்.

பொது மக்களுக்காகச் செய்தி சொல்லியும் தனக்காக வியாபாரம் செய்தும் அவன் காலங் கடத்திவிடவே, பார்க்கர் வீழ்ச்சிக்கு ஐந்து மைல் முன்ஞ லிருந்த சத்திரம் ஒன்றில் அவன் அன்று தங்க வேண்டிய தாயிற்று. இரவு உணவிற்குப் பின்ஞலே படுக்கை யறையிலே உட்கார்ந்து கொண்டு அதை மறுபடியும் சொல்லத் தொடங்கிஞன். அந்தக் கதை வெகுவாக வளர்ந்து, சொல்லி முடிக்க அரை மணி நேர மாயிற்று. அந்தக் கூடத் திலே இருபது பேர் வரை இருந்தார்கள். அதில் பத்தொன்பது பேர் இதை வேத வாக்காக எடுத்துக் கொண்டார்கள். இருபதாவது ஆள்-ஒரு உழவன், சிறிது நேரத்திற்கு முந்தித்தான் குதிரைமேல் வந்தவன்-மூலையிலே சுருட்டுப் பற்ற வைத்துக்கொண்டு உட்கார்ந் திருந்தான். கதை முடிந்ததும், அவன் எழுந்திருந்து, தன் நாற்காலியை டாமினிகஸின் அருகில் போட்டுக் கொண்டு அவனை விறைக்கப் பார்த்தான். வியாபாரி மோந்திருந்ததற்குள்ளே மிகவும் மோசமான புகையிலையின் நாற்றம் அவன் வாயி னின்று வந்து கொண் டிருந்தது.

. கிராம நியாயாதிபதி விசாரணை செய்வதைப் போல அவன் கேட் டான். "கிம்பால்டனின் கிழ ஜமீன்தார் ஹிக்கின்பாதம் தன்னுடைய தோட்டத்திலே முந்திய இரவு கொல்லப்பட்டுக், காலை தொங்கிக் கொண் டிருந்தாரென நீ சத்தியம் செய்ய முடியுமா?"

"தோழனே, நான் கேட்டபடி அந்தக் கதையைச் சொல்லுகிறேன்" என்று பாதி எரிந்து போன சுருட்டை நழுவ விட்டுக்கொண்டே சொன் ஞன் டாமினிகஸ். "நான் இதைக் கண்டதாகச் சொல்லவில்லை. அவர் அந்தப்படி கொல்லப் பட்டாரென சத்தியம் செய்ய முடியாது."

"ஆஞல் நான் செய்கிறேன்" என்ருன் அந்த உழவன். "ஜமீன்தார் ஹிக்கின்பாதம் நேற்றைய இரவு கொல்லப்பட் டிருந்ததால் இன்று காலை அவரது ஆவியோடு சாராயம் குடித்தேன். நான் பக்கத்து வீட்டுக்காரஞ யிருந்ததால், அவர் வீட்டுப் பக்கமாகக் குதிரை யேறிச் செல்லும் போது அழைத்துத் தமக்காக வழியிலே ஓர் வேலை செய்யும்படி கேட்டுக் கொண் டார். தம்முடைய கொலையைப் பற்றி என்னைவிட அவருக்கு அதிகமாகத் தெரிந்திருக்கவில்லை."

"ஏன், அப்போது அது உண்மையா யிருக்காது" என்று மொழிந்தான் டாமினிகஸ் பைக்.

"அது உண்மையா யிருந்தால் அதைப்பற்றி என்னிடம் சொல்லி யிருப் பார் என்று எண்ணுகிறேன்" என்று உழவன் சொல்லிவிட்டு, தன்னுடைய நாற்காலியை மீண்டும் மூலைக்குத் தள்ளிக்கொண்டு போகவே, டாமினி கஸ்பைக் அதைர்ய மடைந்தான்.

ஹிக்கின்பாதம் பற்றி என்ன வருந்தத்தக்க செய்தி! வியாபாரி மீண்டும் அரட்டையில் கலந்துகொள்ளவில்லை; சாராயமும் தண்ணீரும் ஒரு கோப்பை அருந்திவிட்டுப் படுக்கைக்குச் சென்று விட்டான். பியர் மரத்தில் தொங்கும் சவத்தைப் பற்றியே கனவு கண்டான். அந்தக் கிழ உழவனைத் தவிர்ப்பதற்காகக் கிழக்கு வெளுக்காததற்கு முன்னமேயே எழுந்திருந்து, தன் சிறிய குதிரையைப் பச்சை வண்டியில் பூட்டி பார்க்கர் வீழ்ச்சியை நோக்கி வேகமாகச் சென்றான். புதிய காற்று, ஈரமான பாதை, வசந்த காலத்துக் காலை இவை யெல்லாம் கூடி அவனுக்குப் புதிய உணர்ச்சி தந்தன. வழியிலே யாராவது அகப்பட்டிருந்தால் பழைய கதையை மீண்டும் சொல்லி யிருப்பான். மாட்டுவண்டி, பாரவண்டி, குதிரைக்காரன், பாதசாரி-எந்தப் பயலும் குறுக்கே வரவில்லை. சால்மன் நதியைக் கடந்தவுடன் ஒரு மனிதன் தடி நுனியிலே சுமையைத் தாங்கிக்கொண்டு தள்ளாடி வருவதைக் கண்டான்.

"தோழனே, காலை வணக்கம்" என்றான் நம் வியாபாரி கடிவாளம் போட்டுக் கொண்டே. "நீ கிம்பால்டனி லிருந்தோ சுற்றுப் புறங்களி லிருந்தோ வந்தால் ஹிக்கின்பாதத்தைப் பற்றிய உண்மையான சமாச்சாரத்தைச் சொல்ல முடியும். இரண்டு அல்லது மூன்று இரவுகளுக்கு முன்னால் உண்மையாக அந்தப் பயல் ஒரு ஐரிஷ்காரனாலும் நீக்கிரோவாலும் கொல்லப்பட்டாரா?"

டாமினிகஸ் அவசரமாகச் சொன்னதாலே, அந்த அன்னியரிடத்திலே நீக்கிரோ இரத்தம் பதுங்கி இருந்ததை அவன் முதலில் காணவில்லை. திடீரென்று இப்படிக் கேட்கப்பட்டவுனே அந்த எதியோபியன் நிறம் மாறி நடு நடுங்கிப் போய்ப் பதில் சொன்னான்.

"இல்லை; அங்குக் கறுப்பன் இல்லை; ஐரிஷ்காரன் தான் அவரை நேற்றிரவு எட்டு மணிக்குத் தூக்கிட்டான். நான் ஏழு மணிக்கே புறப்பட்டு விட்டேன். அவரது மனிதர்கள் அவரைத் தோட்டத்திலே இன்னும் பார்த்திருக்க முடியாது."

இதைச் சொன்னவுடனே அந்த மனிதன் களைப்படைந்தவனைப்போல் நிறுத்திக்கொண்டு வேகமாக நடந்தான். அவனைப் பிடிக்க வியாபாரியின் குதிரை ஓடவேண்டி யிருந்திருக்கும்! டாமினிகஸ் அவனைப் பேராச்சர்யத்தோடு விறைக்கப் பார்த்தான். செவ்வாய் இரவு வரை கொலை நடந்திரா விட்டால், செவ்வாய் காலையிலேயே முன்னதாக அறிந்து சொல்லிய தீர்க்க தரிசி யார்? ஹிக்கின்பாதத்தின் சவத்தை அவரது குடும்பத்தார்களே இன்னும் பார்க்காதபோது, துரதிர்ஷ்டமான மனிதன் தூக்கிடப்படுவதற்கு முன்னமேயே புறப்பட்டு முப்பது மைல் வந்திருந்த இந்த மனிதனுக்கு எப்படித் தெரிந்திருந்தது? இந்தக் குழப்பமான நடத்தைகளும், அந்த மனிதனது வியப்பும் பயமும், டாமினிகஸை, அவன் கொலையின் ஓர் பங்காளி என்று சத்தமிட எண்ணச் செய்தது. உண்மையாகவே கொலை ஒன்று நடந்திருக்கிறது.

பாவம், அவன் போய்த் தொலைக்கட்டும் என்று விட்டுவிட்டான். "அவன் இரத்தத்தை என் தலைமீது தெளித்துக்கொள்ள நான் விரும்பவில்லை. அவனைத் தூக்கிடுவதால் ஹிக்கின்பாதத்திற்கு மீண்டும் உயிர் வந்துவிடப் போகிறதா? அந்தக் கிழக் கனவானுக்கு மீண்டும் உயிர் வருவது-அதுவும் ஒரு பாவம் தான்-அவர் இரண்டாம் தடவை உயிர் பெற்று வந்து என்னைப் பொய்யனாக்குவதை நான் விரும்பவில்லை."

இந்த ஜபத்தோடேயே அவன் பார்க்கர் வீழ்ச்சியின் கடை வீதிக்குள்ளே வண்டியை ஓட்டிக்கொண்டு வந்தான். எல்லோரும் அறிந்தபடி அந்த ஊர் மூன்று பஞ்சாலைகளும் ஒரு கத்திரி மில்லும் சேர்ந்து உண்டாக்கும் அளவுக்கு உயிருள்ளதாக இருந்தது. இயந்திரங்கள் இன்னும் தொடங்கப்படவில்லை. சில கடைகளை மட்டும் திறந்து வைத்திருந்தனர். டாமினிகஸ் லாயத்திலே குதிரையை விட்டு அதற்கு நான்கு படி கொள்ளு கொடுக்கும்படி உத்தரவிட்டான்.

அவனது இரண்டாவது வேலை, ஹிக்கின்பாதத்தின் கொலையைப் பற்றிச் சத்திரக்காரனுக்குச் சொல்வது. கொலை நடந்த தினத்தையும், கொலை செய்தவர்கள் ஐரிஷ்காரனும் நீக்கிரோவுமோ அல்லது அயர்லாந்தின் மகன் மட்டுமோ என்பவைபற்றி நிச்சயமாகச் சொல்வது புத்திசாலித்தனமல்ல என்பதை அவன் தெரிந்துகொண் டிருந்தான். தன் சொந்த அனுபவத்தின் மீதோ அல்லது பிறர் சொல்லக் கேட்டோ தெரிந்ததாக அவன் கூறவில்லை. பொதுவாகப் பரவியிருந்த சமாச்சாரமாகச் சொன்னான்.

காய்ந்த மரங்களிடையே நெருப்புப் பரவுவதைப்போல அந்தச் செய்தி ஊர் முழுதும் பரவிற்று. அது ஊர் நிறைந்த பேச்சானபின் அது எங்கிருந்து புறப்பட்டதென யாராலும் சொல்ல முடியாமற் போயிற்று. மில்லின் பங்காளியாகவும் பருத்தி வியாபாரியாகவு மிருந்ததனால், ஹிக்கின் பாதம் அந்த ஊர்க்காரராகவே மதிக்கப்பட்டார். அந்த ஊர்க் குடிகள் அவரது விதியில் தங்களது க்ஷேமம் சம்பந்தப்பட் டிருப்பதாக நம்பினர்.

அவ்வாறு பரபரப்பு உண்டாகவே, அவ்வூர் கெஜட் பிரசுர நாளுக்கு முன்னதாகவே பாதி வெற்றுக் கடிதத்துடன், ஒரு பகுதியில் கொட்டை எழுத்துக்களில் ஹிக்கின்பாதத்தின் கொலை என்ற தலைப்பில் செய்தி வந்தது. மற்ற பயங்கர விவரங்களுக் கிடையிலே எவ்வாறு செத்த மனிதனின் கழுத்திலே தடிப்புத் தோன்றியது, எவ்வளவு ஆயிரம் டாலர்கள் திருட்டுப் போயின என்ற விவரங்களும் கண்டிருந்தன. மைகேல் மகானின் பியர் மரத்திலே, தன்னுடைய பைகளின் உட்புறம் வெளியே இழுத்து விடப்பட்ட நிலையிலே தொங்கும் மனிதனின் மருமகள் எவ்வாறு துன்புற்று மூர்ச்சித்து விழுந்தாள் என்பதையும் போட் டிருந்தார்கள். உள்ளூர்க் கவி ஒருவர் வருந்தும் மங்கையின் துன்ப நிலையைப் பதினேழு கவிகளில் பாடினார். அனுதாபிகள் கூட்டங்கூடி அவர் அந்த ஊருக்கு செய்துள்ள நன்மைகளை விளங்கக் கூறினர். கொலைஞரையும் திருடப்பட்ட சொத்துக்களையும் கண்டு பிடிப்பவருக்கு ஐந்நூறு டாலர் பரிசளிப்பதாகத் தீர்மானிக்கப்பட்டது.

இதற்குள்ளே பார்க்கர் வீழ்ச்சியின் மக்கள் பூராவும், தொழிலாளிகள், தொழிற்சாலைப் பெண்கள், பள்ளிக்கூடப் பையன்கள் எல்லோரும் கூடினர். அவர்கள் எழுப்பிய இரைச்சல், செத்தவனுக்கு மரியாதையாக நிறுத்தி வைக்கப்பட்ட இயந்திரங்களைத் தோற்கடித்தது. ஹிக்கின் பாதம் இம்மாதிரி நிகழ்ச்சியிலே விருப்புக் கொண்டிருந்தால் அவருடைய ஆவி இந்தக் குழப்பத்திலே பங் கெடுத்துக்கொண் டிருக்கும்.

இப்போது நம் நண்பர் டாமினிகஸ், முன்னதாகவே எண்ணி யிருந்த எச்சரிக்கைகளை மறந்து, ஊர்க்குமிழியின் மேலேறி தானே அம்மாதிரி உணர்ச்சியைப் பெருக் கெடுக்கச் செய்த அந்தச் செய்தியைக் கொண்டு வந்தவன் என்று அறிவித்தான். அவன் அந்தச் சமயத்திலே பெரிய மனிதனாகி, தன் சொற் பெருக்கின் புதிய பிரதி யொன்றை வெளியிட்டான். அவனது சொல் சொற்பொழிவு நிகழ்த்தும் பாதிரியாருடையதைப் போன் றிருந்தது. அப்போது தான் மெயில் வண்டி தெருவில் வந்து நின்றது. அது

இரா பூராவும் பிரயாணம் செய்து காலை மூன்று மணிக்கு கிம்பால்டனில் குதிரை மாற்றி யிருக்க வேண்டும்.

"இப்போது நாம் எல்லா விவரங்களையும் கேட்போம்" என்று கூட்டம் மொழிந்தது. சாவடியின் வாசலிலே வண்டி நின்றபோது ஆயிரம் பேர் அதைத் தொடர்ந்து நின்றனர். வேலைகளிலே மூழ்ந்திருந்த எஞ்சிய சிலரும் இதைக் கேட்க ஓடினர். நம்முடைய வியாபாரி அந்தக் கூட்டத்தின் முன்னாலே நின்று கொண் டிருந்தான். வண்டியினின்று இறங்கிய இரு பிரயாணிகளும் கும்பல் சூழ்ந்திருப்பதைக் கண்டு திடுக்கிட்டனர். ஒவ்வொருவரும் கேள்வி கேட்டு எல்லாம் குழம்பிப் போகவே, வண்டியிலிருந்து இறங்கிய வக்கீலும் இளம் யுவதியும் வாயடைத்துப் போயினர்.

"தோழர் ஹிக்கின் பாதம்! வயதான அந்த ஹிக்கின் பாதம் பற்றிச் சொல்லுங்கள்" என்று கேட்டது கூட்டம். "பிரேதப் பரிசோதனையின் முடிவென்ன? கொலையாளிகள் கண்டு பிடிக்கப்பட்டார்களா? ஹிக்கின் பாதத்தின் மருமகள் மயக்கம் நீங்கினளா? ஹிக்கின் பாதம், சொல்லுங்கள்!"

தனக்கு இரண்டு புதிய குதிரைகள் தராததற்காக வண்டிக்காரன் சத்திரக்காரனை ஏசிக் கொண் டிருந்தான். வக்கீல் தூங்கி வழிந்து கொண் டிருந்தார். உணர்ச்சி நிறைந்த கூட்டத்தின் எண்ணத்தை யறிந்த அவர் பையி லிருந்து ஒரு புத்தகத்தை வெளியே இழுத்தார். இதற்குள்ளே டாமினிகஸ் ஒடுக்கமான ஒரு வாலிபனாகி, வக்கீலை விடத் தெளிவாக அந்தப் பெண் விஷயங்களைச் சொல்லக் கூடுமென்று எண்ணி அவளைக் கீழே இறக்கிவிட்டான். அந்த அழகிய, நாகரீக யுவதி, வெயிலிலே பிரகாசித்தாள். அவளது வாயினின்று கொலைக் கதையைவிட காதற் கதையையே கேட்க டாமினிகஸ் விரும்பி யிருப்பான்.

"கனவான்களே, சீமாட்டிகளே" என்று தொடங்கினர் வக்கீல், கூடி யிருந்த தொழிலாளிகள், கடைக்காரர்கள், தொழிற்சாலைப் பெண்களை நோக்கி, "ஹிக்கின்பாதத்தின் கண்ணியத்தைக் குறைப்பதற்காகத் தெரியாத் தனமாகவோ வேண்டு மென்றோ கூறப்பட்ட புனைந்துரை உங்களிடையே பரவியுள்ளது. நாங்கள் இன்று காலை மூன்று மணிக்குக் கிம்பால்டன் வழியாகச் சென்றோம். எந்தக் கொலையாவது நடந்திருக்குமானல் அது எங்களுக்குத் தெரிவிக்கப்பட் டிருக்கும். ஹிக்கின் பாதத்தின் கை யெழுத்தைக் கொண்டே இது பொய் என்று நான் நிரூபிக்க முடியும். கின்னக்டிகட் நியாய மன்றத்து வழக்கு ஒன்றைப்பற்றி குறிப்பு ஒன்று அவரிட மிருந்து வந்தது இதோ இருக்கிறது. நேற்று மாலை 10-மணிக்கு எழுதப்பட்டதாக அதில் குறித் திருக்கிறது."

அவ்வாறு சொல்லி அந்த வக்கீல் குறிப்புச் சீட்டில் கண் டிருந்த தேதியையும் கையெழுத்தையும் காட்டினர். அப்போது ஒரு சந்தேகம் தோன்றிற்று. அதை எழுதியபோது ஹிக்கின்பாதம் உயிருடன் இருந்தாரா என்பது. அவர் உலக விவகாரங்களிலே அதிகமாகப் பற்றுக் கொண் டிருந்ததால், செத்த பிறகும் அவற்றைத் தொடர்ந்து நடத்தலாம். ஆனல் எதிர் பாராத சாக்ஷியம் ஒன்று வந்தது. அந்த இளைய யுவதி வியாபாரியின் சமாதானத்தைக் கேட்ட வுடனே, ஒரு கணம் தயங்கி, தன்னுடைய உடையையும் தலைச் சுருளையும் சரிப்படுத்திக்கொண்டு சத்திர வாயிலில் வந்து தான் சொல்வதைக் கேட்கும்படி பணிவாகக் கேட்டுக் கொண்டாள். "நல்ல மனிதர்களே! நான் ஹிக்கின்பாதத்தின் மருமகள்"

அவளுடைய அழகிய தோற்றத்தைக் கண்ட கூட்டத்திலே ஓர் ஆச்ச ரிய முணகல் பிறந்தது. இறப்பின் வாயிலிலே மயங்கிக் கிடந்தவளா இவள்? பார்க்கர் வீழ்ச்சி கெஜட்டில் அப்படி அவர்கள் படித்திருந்தனர். பணக்கார மாமன் இறந்ததற்காக இந்த இளைய பெண் வருந்துவாளோ எனச் சிலர் ஐயுற்றனர்.

மிஸ் ஹிக்கின் பாதம் தொடர்ந்து பேசினாள், "என்னுடைய மாமன் ஹிக்கின் பாதத்தைப் பற்றிய இந்தச் செய்தி பொய் என்று நான் நிச்சய மாகக் கூற முடியும். நான் பள்ளிக்கூடத்திற்குச் சொல்லிக் கொடுப்பத ணல் பெறும் வருமானத்தைக் கொண்டு வாழ்ந்தாலும், அவர் வீட்டின் ஒரு பகுதியை எனக்கு அன்போடு கொடுத்திருக்கிறார். பார்க்கர் வீழ்ச்சியி லிருந்து ஐந்து மைல் தொலைவிலுள்ள ஓர் நண்பருடன் விடுமுறை வாரத் தைக் கழிப்பதற்காக நான் இன்று காலை கிம்பால்டனை விட்டுப் புறப்பட் டேன். என்னுடைய சத்தத்தை மாடிப் படிகளிலே கேட்கும் போதே என்னுடைய வயதான மாமன் என்னைத் தன் படுக்கைக் கருகிலே அழை த்து இரண்டரை டாலர்களை வண்டிச் சத்தத்திற்காகவும் ஒரு டாலரை மேற் செலவுக்கும் கொடுத்தார். பின்னர் தன் கைப் புத்தகத்தை தலையாணிக் கடியிலே வைத்துவிட்டு என்னைக் கை குலுக்கிய பின்னர் வழியிலே காலை யுணவு எடுத்துக் கொள்வதற்குப் பதிலாக கொஞ்சம் பிஸ்கட் கொண்டு போகும்படி சொன்னார். ஆகவே நான் என் அன்பான மாமனை உயி ரோடே விட்டு வந்ததால் அவ்வாறே திரும்பும்போதும் காண முடியுமென்று நம்புகிறேன்."

அவள் பேச்சிலே கூறிய உபசாரம், தெளிவாகவும் பணிவாகவும் இருக்கக் கண்ட மக்கள், அவள் சட்ட சபைத் தொடக்கப் பேச்சாளியாக இருக்கத் தகுதியானவள் என்று எண்ணினர். ஆனால் ஒரு அன்னியன், ஹிக்கின் பாதத்தி னிடத்திலே பார்க்கர் வீழ்ச்சியின் மக்கள் எவ்வளவு அருவருப்பு கொண் டிருந்தனர் என்பதையும், அவர் உண்மையிலேயே கொல்லப்பட் டிருந்தால் நன்றி யறிவிப்புக்கூடத் தெரிவித்திருப்பர் என்றும் எண்ணி யிருப்பான். அவ்வூர் மக்கள் அவ்வளவு கோபம் கொண் டிருந்த னர் தங்கள் தவறை யுணர்ந்தபோது.

டாமினிகஸுக்கு பொது ஜன கவுரவம் வழங்குவதாக மில்காரர்கள் முடிவு செய்தனர். தார் பூசலாமா, இறகு செருகி தமாஷ் செய்யலாமா அல்லது குழாயின் மேலேறிக்கொண்டு தான் தான் செய்தி கொண்டு வந்தவ னெனச் சொன்னானே அதே குழாயில் நீராட்டலாமா என்பதை அவர்க ளால் முடிவு செய்ய முடியவில்லை. பொது மக்களின் நன்மையைப் பாதிக் கும் வகையிலே தவறான செய்தியைப் பரப்பியதற்காக அவனைச் சிறையி லடைக்கலாம் என வக்கீல் யோசனை கூறினர். கூட்டத்தின் சட்டத் திட மிருந்தோ, நியாய மன்றத்தின் நீதியிட மிருந்தோ, அவன் சார்பாகப் பேசிய அந் நங்கையின் வன்மையைவிட வேறு எதுவும் காத்துவிடவில்லை. தன்னைக் காத்த அந்தப் பெண்ணுக்கு நன்றியாக சில வார்த்தைகள் கூறி விட்டு, அவன் தன்னுடைய பச்சை வண்டியின் மேலேறி நகரை விட்டு வெளியேறினான். பள்ளிக்கூடப் பையன்கள் பக்கத்துக் குட்டையி லிருந்த களிமண்ணைக் கொண்டு சிற்பம் தீட்டி யிருந்தனர். கடைசியாக அவன் அடிமுகம் கூற ஹிக்கின் பாதத்தின் மருமகள் பக்கம் திரும்பியபோது ஒரு களிமண் உருண்டை அவன் முகத்தை உராய்ந்துகொண்டு சென்றது. அவன் உடல் பூராவும் சேருகி, நகருக்குத் திரும்பிச் சென்று அதே குழா யில் குளிக்க வேண்டுமென்றுகூட எண்ணினான்.

எப்படியோ சூரியன் எளிய டமாஸ்கஸின் மீதும் காய்ந்தது. அந்த சேறு—நிச்சய மாகாத செய்தியைப் பரப்பியதற்காகக் கிடைத்த பரிசு—உலர்ந்தபின் துடைக்கப்பட்டது. அவன் குதூகலமான வாலிபனுனபடியால் குஷி மீண்டும் வந்தது. தனது கதை கிளப்பிவிட்ட கிளர்ச்சியை எண்ணிச் சிரித்தான். அவ்வூர்க்காரர்களின் விளம்பரம் சட்டசபையின் நாடோடிகளைக் கலங்கச் செய்யும். பார்க்கர் வீழ்ச்சி கெஜட்டில் கண்ட அடுத்த பகுதி மெயின்டு கிளாடோவி லிருந்து பதிப்பாகி லண்டன் தினசரிகளில்கூட இடம் பெறலாம். ஹிக்கின் பாதத்தின் முடிவைக் கண்ட எல்லா உலோபி களும் தங்கள் பணத்திற்காகவும் உயிருக்காகவும் நடுங்குவர். அந்த இளைய உபாத்தியாயினியின் வசீகரத்தைப் பற்றி வியாபாரி முணகிக் கொண்டிருந் தான். தேவதையைப் போன்ற மிஸ் ஹிக்கின்பாதத்தைப் போன்று பேச் சிலோ தோற்றத்திலோ டேனியல் லெப்ஸ்டர் இல்லையென்று சத்தியம் செய்தான். இவளன்றோ கோபங் கொண்ட மக்களிட மிருந்து என்னைக் காப்பாற்றியவள்!

மோரிஸ்டன் நேர்ப்பாதையிலே அவன் வியாபாரம் செய்ய வேண்டி யிருந்தும் ஏதோ ஓர் முடிவுக்கு வந்தவனுய் கிம்பால்டன் முடுக்கிலே திரும்பி னுன். கொலை நடந்திருக்கவேண்டிய இடத்தை அவன் அணுகியபோது பலவாறுன தோற்றத்தை எய்திய அந்த வழக்கத்தைப் பற்றிய பல நிகழ்ச்சி களும் அவன் மனத்திலே சுழன்றன. முதற் பிரயாணி சொல்லிய கதையை வலியுறுத்த ஏதும் நிகழ்ந்திராவிட்டால், அவன் அதை ஒரு ஏய்ப்பு என்றே எண்ணி இருப்பான். ஆனுல், அந்த நீக்கிரோவுக்கும் இதற்கும் ஏதோ சம்பந்த மிருக்கும். கேள்வி யிடப்பட்டபோது அவன் பயந்ததும் உளறி யதும் இதில் ஏதோ மர்ம மிருக்கிற தென்பதை உறுதிப் படுத்திற்று. ஆனுல் இவற்றி லிருந்து ஹிக்கின் பாதம் பற்றிய சில செய்திகள் தெரிய வந்தன. அவருக்கு ஒரு தோட்டமும் பியர் மரமும் இருந்தன. அவற்றின் பக்கமாக அவர் அடிக்கடி செல்வ துண்டு. வழியிலே எச்சரிக்கையாக விசாரித்துக் கொண்டு போனதி லிருந்து, சிக்கனத்தை உத்தேசித்து சிபார் சில்லாமலே சந்தேகத்துக் கிடமான ஐரிஷ்காரன் ஒருவனை, ஹிக்கின் பாதம் வேலைக்கு வைத்துக் கொண் டிருந்தார் என்பதைத் தெரிந்துகொண் டான்.

தனித்த ஒரு குன்றின் மீது டாமினிகஸ் நின்று கொண் டிருந்தபோது பலமாகச் சொன்னுன், "ஹிக்கின்பாதத்தை உயிரோடு கண்டு அவரையே கேட்டுத் தெரிந்துகொள்ளும் வரையிலே, ஹிக்கின்பாதம் தூக்கி விடப்பட வில்லை என்பதை நான் நம்பப் போவதில்லை! அவர் பெரிய செளரியனுய் இருப்பதால் நான் மந்திரி முதலிய நம்பிக்கையான ஆட்களைக் கொண்டு புறம் எழுதுவிக்கப் போகிறேன்."

மாலை மங்கும் போது அவன் கிம்பால்டன் முடுக்கின் சுங்கச் சாவடிக்கு வந்து சேர்ந்தான். அது அதே பெயரையுடைய ஊரிலிருந்து கால் மைலுக் குள் இருந்தது. குதிரைமேல் சவாரி செய்துகொண்டு ஒரு மனிதன் அவ னுக்குச் சிறிது முன்னுல் சென்று கொண் டிருந்தான். அவன் சுங்கக்கார னிடம் தலை யசைத்துவிட்டு கிராமத்தை நோக்கி விரைவாகச் சென்றுன். சுங்கக்காரன் டாமினிகஸுக்குப் பழக்க மானதாலே சில்லறை வாங்கும் போது சாதாரணமாகக் கால நிலையைப் பற்றிப் பேசிக் கொண்டு இருந்தான்.

கைச்சாட்டையைக் குதிரைமீது எறிந்துகொண்டே டாமினிகஸ் சொன் னுன்.

"ஹிக்கின் பாதத்தைப் பற்றி இரண்டு மூன்று நாளைக்குள் ஏதாவது கேட்டாயா?"

"ஆம்" என்று சுங்கம் வசூலிப்போன் பதிலிறுத்தான். "நீ வருவதற்குச் சிறிதுநேரத்திற்கு முந்திதான் அவர் இந்த வாசலைத் தாண்டிப் போனார். நீ இருளில் பார்க்க முடியுமானால் அதோ அவர் சவாரி போவதைப் பார். ஹெரீப் விற்பனைக்கு இன்று காலை வுட்பீல்டுக்குப் போயிருந்தோம். அவர் சாதாரணமாக அரட்டைக்குப் பின்னாலே என் கையைப் குலுக்கிவிட்டுப் போவதுண்டு. ஆனால் இன்று 'எனது சுங்கத்தை வசூலித்துக் கொள்' என்பதுபோல தலை யசைத்துவிட்டுப் போய் விட்டார். அவர் எங்குப் போனாலும் எட்டு மணிக்கு வீடு திரும்பி விடுவார்."

"அப்படித்தான் சொல்லுகிறார்கள்" என்றான் டாமினிகஸ்,

"இவரைவிட அதிக மஞ்சளாகவும் ஒல்லியாகவும் வேறு யாரையும் நான் கண்டதில்லை" என்று சுங்கம் வசூலிப்போன் கூறினான். "இரத்தமும் சதையும் போலல்லாது வெறும் பதுமை அல்லது ஆவி போலவே அவர் காண்கிறார்."

வியாபாரி இருளிலே கூர்ந்து நோக்கியபோது, கிராமப்பாதையில் தூரத்தில் சவாரி போவோன் ஒருவனைக் கண்டான். அவன் ஹிக்கின் பாதத்தை அறிந்துகொள்வதைப் போல் காணப்பட்டான். மாலை நிழலிலும் குதிரை எழும்பிய தூசியிலும் கண்ட அவரது மர்ம உருவம் மங்கிய ஒளியும் இருளும் கலந்து ஆனது போலிருந்தது.

டாமினிகஸ் நடுங்கினான். ஹிக்கின் பாதம் மறு உலகத்திலிருந்து கிம்பால்டன் முடக்கு வழியாய்த் திரும்பி வந்திருக்கிறார்.

அவன் கடிவாளத்தை அசைத்து வேகமாக முன்னேறினான். மங்கிய நிழலைச் சம தூரத்திலேயே பின் தொடர்ந்தான். அதுவும் ஒரு திருப்பத்திலே மறைந்தது இதே இடத்திற்கு நம் வியாபாரி வந்தபோது அந்த மனிதனைக் குதிரைமேல் காணவில்லை. அவன் நாற் சந்தியைச் சுற்றி யிருந்த இரண்டு வரிசை வீடுகளுக்கு மத்தியிலே தன்னைக் கண்டான். இடது பக்கத்திலே கற்சுவரும் வாசலும் தோப்பின் ஓரமும் அதற்குப் பின்னாலே நகரும் வயலும் கடைசியாக ஒரு வீடும் இருந்தன. இவையெல்லாம் ஹிக்கின் பாதத்தைச் சேர்ந்தவை. அவை ஒரு காலத்திலே இராஜபாட்டை யோரத்தில் இருந்தன. ஆனால் இப்போது ஒதுங்கிப் போய்விட்டது. டாமினிகஸுக்கு அந்த இடம் தெரியும். கடிவாளம் இழுக்கப் படாதிருந்தும் குதிரை நின்றுவிட்டது.

"என்னுடைய உயிருக்காக நான் இந்த வழியில் நுழையப் போவதில்லை," என்று டாமினிகஸ் சொன்னான். "ஹிக்கின்பாதம் பியர் மரத்திலே தொங்குகிறாரா என்பதைக் காணும் வரையிலே நான் எனது மனிதனல்ல."

கீழே குதித்து வண்டியைத் திருப்பித், தோப்பின் பசும்பாதை வழியாக பிசாசால் துரத்தப்படுபவன் போல வேகமாய் ஓட்டிச் சென்றான். அப்போதுதான் கிராமக் கடிகாரம் எட்டடித்தது. ஒவ்வொரு அடியின் போதும் அவன் வேக வேகமாக ஓட்டிச் சென்றான். அப்போது தனித்த அந்த தோட்டத்துக்கு நடுவிலே, விதியின் கூத்துக்கு உட்பட்ட அந்த பியர் மரத்தைக் கண்டான். வளைந்த அடி மரத்திலிருந்து வெளியே நீண்டிருந்த ஒரு

பெரிய கிளை அந்த ஒரு இடத்தில் மட்டும் கரிய நிழலைத் தந்தது. ஆனல் அந்தக் கிளைக்குக் கீழே ஏதோ அசைவது தெரிந்தது.

சாந்தமான மனிதன் கனவுகூடக் கண்டிராத அளவு தைரியம் அப்போது அவனுக்கு வந்தது. இந்தப் பயங்கரத் தேவையின் போது இவ்வளவு தைரியம் வந்ததன் காரணத்தை அவனால் கூடத் தெரிந்துகொள்ள முடியவில்லை. உண்மை இதுதான். அவன் துணிந்து முன் சென்று ஜரிஷ்தடியன் ஒருவனைத் தன் சாட்டையின் பின்புறத்தால் கீழே வீழ்த்திவிட்டு மரத்தைப் பார்த்தான். பியர் மரத்திலே தொங்கிக் கொண்டிருக்கவில்லை. ஆனல் அதன் கீழே கழுத்தில் கயிறோடு நடுங்கிக் கொண்டிருந்தார்—சாக்ஷாத் ஹிக்கின்பாதம்.

அச்சமடைந்த டாமினிகஸ் கேட்டான், "ஐயா, ஹிக்கின்பாதம்! கவுரவமாக உண்மையைச் சொல்லுங்கள். நான் உங்கள் வார்த்தையை நம்புவேன். நீங்கள் தூக்கிடப்பட்டீர்களா, இல்லையா?"

இந்த விடுகதை புரிந்துகொள்ளப்படவில்லையானல், சில வார்த்தைகள் எப்படி இந்த வரப்போகும் நிகழ்ச்சியின் சாயல் முன்னதாகவே தெரிந்தது" என்பதை விளக்கும். மூன்று மனிதர்கள் சேர்ந்து சதியாலோசனை செய்து ஹிக்கின் பாதத்தைக் கொல்லவும் கொள்ளையடிக்கவும் எத்தனித்தார்கள். இருவர் தொடர்ச்சியாகத் தைரியமிழந்து ஓடிப்போக இரண்டு நாள் தாமதமாகிவிட்டது. மூன்றுமவன் இந்த அக்கிரமத்தில் முனைந்திருக்கும் போது பழைய காவியங்களிலே சொல்லப்பட்ட வீரர்களைப்போல ஒருவன், விதியின் கட்டளைக்கு உட்பட்டு டாமினிகஸின் உருவத்திலே வந்து சேர்ந்தான்.

இன்னும் கொஞ்சம் தான் சொல்லவேண்டியிருக்கிறது. ஹிக்கின் பாதம் அவனைத் தட்டிக்கொடுத்து, தன் மருமகளைக் கலியாணம் செய்துகொள்ள அனுமதித்தான். தனது சொத்து பூராவையும் அவர்களது குழந்தைகளுக்கு எழுதிவைத்து அவர்களுக்கு வட்டி மட்டும் கிடைக்கும்படி ஏற்பாடு செய்தார். இவைகளுக்குப் பின்னலே தனது தயாளத்தின் உச்சமாக அந்தக் கனவான் நோய் வாய்ப்பட்டு இறக்க, டாமினிகஸ் பைக்கிம் பால்டனை விட்டு நீங்கி எங்களூருக்கு வந்து ஒரு புகையிலைத் தொழிற்சாலையை ஏற்படுத்தினன்.



# தமிழர் எழுகலை விளக்கம்

ரா. சுப்பிரமணியன்



தித்திக் குஞ்சொற் செழுமையி னோங்கும்
முத்தமிழ்க் கடலில் மூழ்கித் திளைக்கும்
மீனினம் போன்று மிளிர்ந்திடு வோமே!
தேனோ பாலோ, தீங்கற் கண்டோ!
வானோர் அமுதோ, வாழ்வின் மருந்தோ!
பானற் கலைமணம் பரப்புந் தமிழே!
அருந்தமிழ் நீரைப் பிரிந்திடில் எங்கள்
திருந்திய வாழ்வும் சீர்கெட் டிடுமே!
தெண்ணீர் பிரிந்த சிறுமீ னாமே!
உண்மை ஈதெம் உயிர்தமிழ் நீரே!
இலக்கியம் எங்கள் இதயம தாகும்!
வலக்கண் ஓவியம்; வடிவம் இடக்கண்;
ஓரை எங்கள் உடல்வனப் பாமே;
சீரிய நடனம் சிந்தைக் களிப்பாம்,
களிப்பின் முதிர்வாய்க் கனியுங் கூத்தே!
இன்னிசை யோமுன்சொன்னநற் கலையெலாம்
மின்னிப் பொலியும் மேன்மையு டைத்தே!

---

**குறிப்பு:**—(1) இலக்கியம், (2) ஓவியம், (3) வடிவம் (சிற்பம்)
(4) ஓரை (Wrestling) (5) நடனம், (6) கூத்து (நாடகம்)
(7) இன்னிசை ஆகிய இவ் வேழும் தமிழர் எழுகலை எனக் கொள்ளப்படும்.

என் நிழல்? அது அடியோடு மறைந்தேபோய் விட்டது. இனி எனக்கென்ன கவலை?

# ஒளியும் நிழலும்

எஸ். ஆர். ஜெயவேலன் பி. ஏ.,



**வா**னோங்கி வளர்ந்து, மேனோக்கின் கீழ் நோக்கும் கதிரவன் கிரணங்கள் கண்ணுக்கா வண்ணம் பரந்த இளந்தளிர் மரங்களிடையே என் பார்வை சென்றது. "எட்டிப் பிடித்தால் கொட்டையூர்" என்றொரு வழிப்போக்கன் கூறியது பொய்த்து விட்டது. பத்துமைல் நடந்தும் சிற்றூர் ஏதும் காணாது மனம் பதைத்தது. வழி நடந்த கால் மிடி தீரலா மென்றாலோ விரைவில் இரவு கானெலாம் பரவுமென்ற அச்சம் ஆழ்ந்தது. ஆனால், உடல் சோர்வின் உச்சமும், பசியின் கடுப்பும் என் மனதை கடிதில் உணவு தேட உறுத்தின. கதிரவன் மறைவதன் முன் கிடைத்ததொரு சில காய் கனிகளைப் பறித்து உண்டேன்.

அதற்குள் மதுரகான பறவை மொழிகள் ஒடுங்கிவிட்டன. புள்ளினங்களும் நல்லினங்களும் கூடடைந்து விட்டன. எங்கோ ஓரிரண்டு கிள்ளைகள் தம் சிறகையடித்து நல்லிடம் பிறிதொன்று பார்த்து அடங்கி விட்டன. பரந்த கானின் எல்லை இருளில் சுருங்கிக்கொண்டே வந்தது. என்னெதிரில் சற்று முன் கிடந்த சிற்றோடை கூட இருளில் மறைந்துவிட்டது. இன்னும் சிறிது நேரத்தில் என்னை மட்டும்தான் நான் அறிந்துகொள்ள முடிந்தது. காரிருளின் தன்மையை எண்ணி எண்ணி நடுங்கிக் கொண்டிருந்த என் மன ஒளி மட்டும் தனிக்காட்டு ராஜாவைப்போல் சிறிது சிறிது சுடர் விட்டெரிந்து கொண்டிருந்தது.

அப்பப்பா! என்ன பயங்கரம்? அதோ கொடிய பாதகர்களைப்போல் இரவு தட்டியதும் கிளம்பி விட்டனவே ஒளிந்து கிடந்த நரிக் கூட்டங்கள். என்ன கொண்டாட்டம்! என்ன கொக்கரிப்பு! அவற்றின் ஓலம் காதைப் பிளந்துகொண்டு எங்கோ எதிரொலித்து மறைவது முதுகாட்டில் கூத்தடிக்கும் கழுதுகளையு மல்லவா புறக்கணிக்கின்றது! கொலைத்தொழிலை மேற்கொண்ட கொடிய விலங்குகளுக்கு இன்றியமையாததாக அமைந்திருக்கும் இவ்விருளும் எத்துணை கொடியது? ஆ! அது மட்டுமா? பனிமண்டலப் பரப்பில் பரவி நிலவும் ஊதற்காற்று பகலவன் பகலெல்லாம் மக்கள்பால் கரைந்துருகிய ஈவிரக்க மனத்தையும் ஈரமற உறைவித்து நல்லனவற்றை யெல்லாம் அல்லனவாக்கி விட்ட தன்மைதான் என்ன?

துக்கம் நெஞ்சடைக்க குளிர்த்துன்பம் உடலைப் பஞ்சடிக்க இப் பயங்கர இரவை, அதிலும் கொடிய விலங்குகளின் மத்தியில்,

எப்படிக் கழிப்பது என்று என் மனம் சஞ்சலப்பட்டுக் கொண்டிருந்தது. தட்டித்தவறித் தென்பட்ட இடிந்த கோவிலொன்றில் இரவின் பயங்கரத்தினின்றும் காக்கப்படத் தஞ்சம் புகுந்தேன். தளர்ந்திருந்த என் உடலயர்வு நீங்கக் குறுகியதொரு திண்ணைமீது படுத்துக் கானகத்துக் கோரக்காக்ஷிகளைக் காணுது புறக்கண்களை மன உறுதியின்மையால் மூடிச் சிந்தனையிலாழ்ந்தேன். சிற்றோடையின் ஊற்றுகள்போலப் பெருமிதம் பொங்கி வழிய, க்ஷணப்பொழுதில் பேராறு அடைந்த பெருக்கம் எனவே சிந்தனை உள்ளம் என்னுள் எண்ண வெள்ளத்தைப் பரப்பி அதிலென்னை ஆழ்த்தி விட்டது. தன் வினையிலகப்பட்டுத் தத்தளிக்கும் நான் என்னும் அகந்தை என் சிந்தனைச் சுடரொளியில் கண்டதெல்லாம் அலை அலையாக மோதி வந்த எண்ணச் சிதைவுகளும், இன்ப துன்ப நினைவுகளுமே யொழிய அவற்றினின்றும் நீந்திக் கரையேறும்வகை அறிந்திலது. கட்டிப்பிடிக்காத அளவில் ஆழ்ந்து முக்கால உணர்வி லும் தோய்த்து உடனிழுத்துச் சென்ற தன்மையில் என் மனைவி, மக்கள், சுற்றத்தார், நட்பினர். இல்லம், தோப்பு, துறவு, உணவு, உடை முதலியனவெல்லாம் என் மனக்கண் முன் தோன்றித் தோன்றி மறைந்தன. "நேற்று என் பதவி என்ன? குலமென்ன? கோத்திரமென்ன, சாத்திரமென்ன, பொருளென்ன, சீரென்ன, சிறப்பென்ன?...இன்றிரவு என் கதிதான் என்ன? விதியின் சதியே சதி!...பொய்யான வாழ்வை விடாது தொடர்ந்து ஒறுக்கும் முன்வினைத் தீமையின் வலிமையைக் கடிந்தார் யாரே? ஈகை, தாளாண்மை, ஒப்புரவு, நல்லொழுக்கம், கல்வி கேள்வி இவையனைத்தும், அறிந்தும், தன்வினை தகர்த்தெறியா மாந்தரின் நிலைமை எத்துணை பரிதபிக்கத் தக்கது!" என்றெல்லாம் என் மனம் குழைந்துருகி அணையும் விளக்கின் ஒளிபோன்று சீரிய எண்ணங்களை எழுப்பிவிட்டுக் கொந்தளித்துக் கொண்டிருந்தது. ஆனால் அது நீடித்து நிற்கவில்லை. எவ்வளவுக்கெவ்வளவு அவை கொந்தளித்துக் கொண்டும் மனோவேகத்தின் விறுவிறுப்பையும் அடைந்தனவோ அவ்வளவுக்கவ்வளவு கடிதில் ஒடுங்கி விட்டன. சற்று நேரத்திற்கெல்லாம் கானெலாம் விழுங்கிய அந்தகாரம் கோயிலில் அம்மையின் சந்நிதானத்தின் அமைதியே அடைக்கலம் என வீற்றிருந்த என்னையும் அண்மி, என் ஊனக்கண் இருந்தும் இல்லாததாகிப் பொய்த்த விதத்தைப்போலவே, என் ஞானக்கண்களையும் குத்திவிட்டு அகமும் புறமும் அல்லனவாக்க முனைந்து விட்டது. பின் என் ஆயிற்றென்பது நான் என்னும் ஒருவன் இருந்தால் தானே தெரிவதற்கு? இருட் போர்வையால் என்னைத் துயிலாழ்த்த நித்திராதேவி தான் என்னை சீராட்டிக் கொண்டிருந் திருக்கவேண்டும்.

பிற்றைநாட் காலை செஞ்சுடரொளியொடு மன்பதை மாக்கள் களியுறு வண்ணம் செக்கர் வானில் இரவி தன் புரவியேறி வருதலைக் கூவி யழைக்கும் புள்ளினங்களின் தீங்குரல் என்னையும் இவ்வுலகில் மீண்டும் அந்தகாரத்தினின்றும் மீட்டெழுப்பியது. பெறலரும் இம் மீட்சியினை இரவின் தொடக்கத்தில் சிறிதும்

நினைத்தோமா என்று மனம் வெட்க, தேர்வு தந்த தேவனின் தாளிறைஞ்ச எண்ணங்கொண்டு, உடைந்த கோவிலை வலம் வந்து அபயம் தந்த அம்பிகையை வணங்கிவிட்டு, வான் வலம் பவனி வரும் ஞாயிறு தோன்ற நிற்கும் குன்றுக்கெதிர்த்ததோர் வெளியிடை நின்ற தாமரைத் தடாகத்தை அண்மினேன். தடாகத்தின் தண்ணீர், மலர்ந்து கொண்டிருக்கிற தாமரைமொட்டுகள், துள்ளியோடி விளையாடுகின்ற சிறுமீன்கள் இவைகளிலெல்லாம் எனக்கு ஏதோ ஒருவித கவர்ச்சி ஏற்பட்டது. அத் தடாகத்தில் மூழ்கி எழுந்திருக்கும் போதே இரவு என்னைக் காத்தருளிய கருணையம் கடலை என் மனமும் நாவும் தாமாகவே ஸ்மரித்துக் கொண்டிருந்தன. கர்ம வினையில் மூழ்கி மீண்டவன்போல் என் இரு கைகளையும் கூப்பிக் கரையின்மேல் நின்று விண்ணொளியேபோல் தன்னொளி சுடர்வீச எழுந்த சூரியனைக் கூவினேன். மனமிசைந்து உருகிப் பாடினேன்.

இந் நிலையில் பின்னிருந்த மரமொன்றில் வீற்றிருந்த கிள்ளையொன்று உயரக் கூப்பிய என் கரங்களின் நிழல் தன்மேல் விழ அலறிப் புடைத்துக்கொண்டு பறந்து சென்று என் நிழல் நாட்டாத உயரியதோர் கிளையில் அமர்ந்தது. "என்ன ஆச்சரியம்! அது என் நிழலா? என் நிழல் அவ்வளவு பெரியதா? என் காலடியிலேயே தொடங்கி அதோ சுமார் முந்நூறடி நீண்டிருக்கும் என் நிழலைக்கண்டு சிறு கிள்ளைகள் நடுங்குவதா?" என்று அதிசயித்துக்கொண்டே தடாகத்தின் கரைமீதே சாலையை நோக்கி நடந்தேன். ஆம்! அம் முந்நூறடி நிழலும் என்னை விடாமல் தொடர்ந்து வர, நிழலில் அகப்படும் பறவைகளையும், பிராணிகளையும் அச்சுறுத்திக்கொண்டே சென்றேன். என் நிழல் அணுகும் தோறும் அச் சிற்றினங்கள் கொடியதொரு பேயைக் கண்டவாறு ஓடி ஒளித்தன.

நேற்றிரவு என்னை உள்ளும் புறமும் மூழ்கடித்த இருளின் தொடர்போ இந்நிழல் என்றொரு ஐயம் பிறந்தது. என் உள்ளம் சோதனைக்குச் சித்தமாயிருந்தது. ஒரு தட்வை தரைமட்டத்திலிருந்து தாவி குதித்தேன். இமைப் பொழுதுதான். அதற்குள், என் கால்களிரண்டும் மீண்டும் தரையில் பதிந்து விட்டன. ஆனால் அவ் விமைப்பொழுதில்—என் உடல் பூமியின் தொடர்பற்று இருந்த அச்சிறு கால அளவில்—என் நிழலு மல்லவா என்னுடன் தொடர்பற்று தனித்துக் கிடந்தது! உலகப்பற்றை அறுத்தவனைப் பாபங்கள் யாவும் அணுகா என்ற தாத்பரியத்திற்கு இதுவும் ஒரு சான்றோ என்று வியப்புற்றேன். என் பின்னிருந்து யாரோ ஒருவர் "ஆம், அது உன் வினைதான். உன்னுடனிருந்து உன்னையே தொடர்ந்து உன்னுடனே அழிவதாகும்" என்று கூறுவது கேட்டது. திரும்பினதும் என் பின்னால் ஒரு முனிவர் நிற்கக் கண்டேன். அவர் என்னைப் பார்த்து புன்சிரிப்புடன், "இந் நிழலைக் கண்டு நீ கலங்காதே. இருட்பிழம்பின் நடுவிலிருந்து வந்தவர்கள் தாம் நீயும் நானும். ஏதோ நல்வினைப் பயன்

களால் அவ்விருளின் பெரும் பகுதியைக் களைந்தாகிவிட்டது. நன்னெறியில் நடந்து, உலகம் உய்ய உடன்பட்டு நேர்வழி நோக்கின் நம்வினை பெரிதும் களையும். அக் கடினபாதையில் புக ஆண்டவன் அருளொளி வீசுவான்'' என்று கூறிவிட்டு மேல் சென்றார்.

அன்று உச்சிவேளை முனிவர் சொன்னதை மனதில் எண்ணிக்கொண்டே அன்றைய உணவை நாடி அடுத்திருந்த சிற்றூரில் போய்க் கொண்டிருந்தேன். பாதையி னடுவில் பளபளவென்று ஒரு தங்க நாணயம் பழுதின்றி விழுந்து கிடந்தது. அதை எடுக்க என் கைகளை நீட்டியபோது திடீரென்று எனக்கு ஒன்று தோன்றியது. ஆம், நேற்றிரவு என்னையே ஆழ்த்திக்கிடந்த அவ்விருள் அன்று காலை முந்நூறடி நீண்டிருந்த அதே நிழல்! இப்போது அது ஓரடியாக என் காலடியில் ஒடுங்கிக் கிடந்தது. என் கரம் பொன்னைக் கொண்டு தரையைத் தாவ என் நிழல் ஈரடியாக நீண்டது! கேவலம் பொன்னைக் கொள்வதால் என் தீவினை இரு மடங்காகி விடுமென்றால் பிற பாதகங்களால் விளையும் தீமையைக் கணக்கிடவும் கூடுமோ என்று ஐயுற்றவாறே நிமிர்ந்து மேனோக்கினேன்.

ஹா என்ன கருணை! நானறியும் தன்மையிலிருந்தும் அறியாமல் என்னை வர்ஷித்து, என்னைப் போஷித்து, தீவினையச்சம் புகட்டி, நல்வழி காட்டிக் கொண்டிருக்கும் ஞாயிறின் தன்மையை எப்படிப் புகழ்வது? "என்ன ஆதரிப்பு! இவ் வேழைமீது ஏனோ அந்த அச்சுப் பார்வை. கூர்மையற்ற பார்வை. ஆஹா! இப்போதன்றோ உன் பரிபூரண நோக்கும் சுடரொளியும் என்மீது அருளினாய்'' என்று வணங்கினேன். பொன்னைக் கண்டவிடத்து விட்டுச் சிற்றூரில் உண்டு என் சேரிடம் நோக்கி நடந்தேன்.

மாலையும் ஆகிவிட்டது. ஆனால் இன்னும் என் வழி மாண்டபாடில்லை. மீண்டுமோர் இரவு கானில் அகப்பட்டு அலையா வண்ணம் சுற்று முற்றும் பார்த்தேன் ஒரு நல்லிடம் நாடி. பைந்தளிர் மரங்கள் அடர்ந்த கானில் ஒரு சிறு குடிசை தெரிந்தது. என் நடையை அவண் திருப்பினேன். குடிசையின் வெளியே முனிவர் ஒருவர் முற்றத்தில் வீற்றிருந்தார். என் கவலையை அவர் செவியுற்றதும், எனக்கு இரவில் தங்குவதற்குக் குடிசையில் ஒரு விடுதி தருவதாகக் கூறினார். பசிக்கடுப்பு மிக்க என் வயிற்றிற்கு உணவும் தந்தருளினார்.

"அன்றிரவு தங்க தக்க வசதி ஏற்பட்டிருந்தும், முனிவரின் துணையிருந்தும், விரைவில் வரும் இருட்பிழம்பின் வருகையை எண்ணும்போது என்னுள் ஏதோ 'திக்' கென்றது. அன்றிரவு முனிவர் ஏதோ யக்ஞம் வளர்த்தப் போவதாக அறிந்ததும் யக்ஞ நிமித்தம் முனிவர்க்குக் குற்றேவல்கள் புரிந்தாயினும் குழம்பிக் கிடந்த என் மனத்திற்கு ஆறுதல் அளிக்கலாம் என்றெண்ணி, நீர்மூழ்கி எழுந்து, சிறு பூசை முடித்துக்கொண்டு உலர்ந்த உடையுடுத்துப் பக்கத்தில் யக்ஞ குண்டத்தின் அருகே சென்றேன்.

அந்தி வானத்தின் அடியில் கதிரவன் கரைவதற்குள் யக்ஞம் பல பலவென்று எரிய ஆரம்பித்து விட்டது என் மனதிற்கு உற்சாக மளித்தது. என் முகமலர்ச்சியைக் கண்டவுடன் முனிவரும் என்னைப் பரிவுடன் பார்த்து "இதோ என்னருகே இப்படி இந்தப் பீடத்தில் உட்கார். பகவத் ஞானத்தில் பக்தியுடன் மனதை செலுத்தி இச் சமித்துக்களை ஒவ்வொன்ருகக் குண்டத்தி லிட்டுக் கொண்டே ஓமத்தை வளர்த்துக் கொண்டிரு," என்ருர். அதன் படியே அவர் பக்கத்தில் அமர்ந்து பெரியதொரு சமித்துகட்டை அவிழ்த்தேன். முதல் சுள்ளியை குண்டத்தி லிடுவதற்கு முன் ஒரு தடவை என் பின் பார்த்தேன். என் பின்னே என் நிழல் பெரிதும் நீண்டிருந்தது. ஆனால் அது மற்றெங்கும் பரவியிருந்த இருளில் பிணைந்து கிடந்தது. அச்சம் என்னை மீண்டும் கவர்ந்தது. ஆனால் மனஉறுதியை மேற்கொண்டு குண்டத்தின் பக்கம் திரும்ப, முனிவர் என்னைப் பார்த்து நகைத்து, "அப்பா, உன் பின்னால் உன் நிழலைத் தவிர வேறென்றுமில்லை. அதைப்பார்த்து ஐயுருமல் உன் பணி செய. அது தானாக மறைந்து விடும்," என்ருர்.

சமித்துகளை மளமளவென்று யாகத்தி லிட்டேன். ஓங்கி வளர்ந்து விட்டது செந்தீ அடர்ந்த கானில் எங்கள் கண்களுக்குத் தெரிந்த விடங்களெல்லாம் பேரொளியுடன் விளங்கின. கண்ணுக்குப் புலப்படாத இடங்களைப்பற்றி எங்களுக்கு என்ன கவலை? சமித்து ஒவ்வொன்றும் என் கர்ம வினையாகவும், அக்னிதேவனே, என் இருவினைகளைக் களையவந்த பரஞ்சுடரெனவும் வகித்து அவற்றைக் குண்டத்தி லிட்டேன். கரம் தன் பணி செய்தது. மனம் பிற பணி மறந்து இறைவனடி பணியும் ஒரு பணியில் நிலைத்து யோகானந்த நிஷ்டையின் பேரானந்த எல்லையை அடைந்து விட்டது.

ஒருமுறை நிஷ்டை கலைந்தது. திரும்பினேன். முனிவர் வேறு இருயக்ஞங்களைத் தொடங்கி விட்டு நிஷ்டையி லாழ்ந்திருந்தார். எங்கும் ஏகத் தேஜோர்ன்மயமாக சுடரொளி வீசிக் கொண்டிருந்தது. எங்கும் ஒளி! என்மேலெல்லாம் ஒளி! என்னைச் சுற்றிலும் ஒளி! நான் அமர்ந்திருந்த பீடத்தின் அடியிலும் ஒளி!

என் நிழல்? அது அடியோடு மறைந்தே போய்விட்டது. இனி எனக்கென்ன கவலை? என் இடம் பொருள், இன்பம் மாட்சி அனைத்தையும் உலகத்தாருக்கே அர்ப்பணித்து விட்டேன். அவை இனி எனக்கேன்? முத்தீயின் அருளால் என் சர்வ பாபங்களும் அழிய முக்தியையே இனி என் மனம் நாடும். அதோ பகவான் ஆக்ஞையும் பிறந்து விட்டது. "இதோ வந்து விட்டேன் சுவாமி" என்று யாகத்தை பெரிதும் வளர்த்தினேன்.

---

**கனவு காணத் தெரியாதவன் கட்டிக் கிடக்கும் தண்ணீர்; அத் தண்ணீர் தொத்து நோய்க்கு இருப்பிடம்; அதை ஏற்றம் வைத்து இறைத்துக் கொட்டாவிட்டால் பேராபத்து விளையும்.**

# கனவு காண்போம்

கமலையா



"வெய்யிற் கேற்ற நிழலுண்டு
  வீசுந் தென்றற் காற்றுண்டு;
கையிற் கம்பன் கவியுண்டு;
  கலசம் நிறைய மதுவுண்டு;
தெய்வ கீதம் பலவுண்டு;
  தெரிந்து பாட நீயுமுண்டு;
வையந் தருமிவ் வளமின்றி
  வாழும் சொர்க்கம் வேறுண்டோ?"

என்பது தேசிக விநாயகம் பிள்ளை தமிழிலாக்கிய உமர்கய்யாம் பாடல்களில் ஒன்று.

பிட்ஜ் ஜெரால்டால் மொழிபெயர்க்கப்பட்ட உமர் கய்யாமின் "ருபய"த்தை முதன் முதல் நான் படித்தபொழுது ஒரு புது உலகில் சஞ்சரிப்பதாகவே எண்ணினேன். என் மனம் ஆகாயத்தில் தன் வரம்புக் குட்படாத ஒன்றைத் தேடி அலைந்து கொண்டிருந்தது. சலனமற்றிருக்கும் தண்ணீர்த் தேக்கத்தில் ஒரு சிறு கூழாங்கல் கணக்கற்ற அலைகளைத் தோற்றுவிக்கிறது; கரையின்றிப் பரந்து கிடக்கும் அலைகடல் அகில உலகத்தையும் விழுங்கி, ஏப்பமிட்டு ஏதேச்சாதிகாரம் செலுத்தும் சக்தி வாய்ந்தது. சிறு தண்ணீர்த் தேக்கமாகிய என் மனம் விரிநீர்ப் பெருக்காம் ருபயத்துடன் ஒன்றுபடச் செய்த முயற்சி ஏளனத்திற்குரியதாயினும் மன்னிக்கற் பாலது.

பெற்றெடுத்த இரு முதுகுரவர், மனைவி யெனும் கண் கண்ட தெய்வம், கோடி செம்பொன்னும் தரமுடியா இன்பம் தரும் "பப்பா"வின் மோகனச் சிரிப்பு, நீலவானத்தை முத்தமிடும பசுமைமலைச் சிகரம், பொதிகையில் தமிழுடன் பிறந்த தென்றல், பச்சை மேனியில் வெண்கம்பளமாகிய மேகபடலத்தைப் போர்த்து நிற்கும் மரக்கூட்டம், நடனமாதின் சதங்கை யொலி போன்று கலகலவெனச் சிரிக்கும் சிற்றோடை, கருங்குயில், பச்சைக்கிளி, வெண்டாமரை, "கறைபட்டுள்ள வெண்கலைத் திங்கள், "கன்னலெனுங் கருங்குருவி மின்னலெனும் புழுவெடுத்து விளக்கேற்றும் கார் காலம்," அந்தி மாலைப்பொழுது, இவைகளை யெல்லாம் துறக்க யாருக்குத் தான் மனம் வரும்?

வாழ்க்கை வாழ்வதற்காகவே இருக்கிறது.

"தோரா வாழ்வின் பறவை இன்னும்
செல்லுந் தூரம் சிறிதேயாம்."

என்று உமர் கய்யாம் சொல்லியும், வாழ்க்கையின் இனிமையை நுகரத் தயக்கம் ஏன்? மலர்ந்த ரோஜாவின் ஆயுள் அற்பம் தான். ஆனாலும், அதன் அருமையும் பெருமையும், எழிலும் ஏற்றமும், மங்கிய சிவந்த இதழ்களும் மனதைக் கவரும் மணமும், இரும்புத் தூள்களைக் காந்தம் இழுப்பதுபோல், நம்மை ஈர்த்துச் செல்கின்றன. சில நாழிகைகள் சென்றால் வாடி வதங்கிப் போய் விடுமேயென்று நம்மில் யாரும் அதன் மதிப்பைக் குறைப்ப தில்லை. சகாராப் பாலைவனத்தைப் பிளந்துகொண்டு பிரயாணம் செய்த பிரெஞ்சுக்காரர் சிலர், நூற்றுக்கணக்கான மைல்களுக்குத் தண்ணீர் கிடைக்காத மணற்பரப்பில் புயலில் அகப்பட்டு அடித் துக்கொண்டு வரப்பட்ட பறவையொன்று, அப்பொழுது பெய்த மழைத்துளிகளால் இன்புற்று இனிய கீதத்தைப் பரப்பியதைக் கேட்டனர். மறுநாள், கதிரவன் தனது அக்கினிக் குழம்பைக் கக்கும்பொழுது, மரத்திலிருந்து உதிரும் உலர்ந்த சருகைப் போல், தானும் ஆவது உறுதி என்பதை அச்சிறு பறவை அறி யாது. மானிட வாழ்க்கை கூடக், கொல்லன் பட்டறையில் பழுக் கக் காய்ச்சின இரும்பில் பட்ட துளிநீர் போன்றது.

போதி மரத்தடியில் ஞானோதயம் பெற்ற "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்" புத்தன், சிலுவையில் அறைபட்டு இறந்த இயேசுவெல்லாம், மின்னலினும் விரைவில் மறையும் வாழ்க்கை யென்று சோம்பிக் கிடந்திருந்தால், மனித வர்க்கம் இன்று மாண்டுபோயிருக்கும். ரூஸ்ஸோவின் பேனா பிரெஞ்சு மக்களைத் தட்டியெழுப்பி வீறு கொடுத்தது. "இன்று தோன்றி நாளை மறையும்; எனக்கென்ன?" என்று கார்ல் மார்க்ஸ் இருந்திருந் தால், "உலகத் தொழிலாளர்களே, ஒன்றுபடுமின்; அடிமைத் தளைகள் தவிர நாம் இழக்க ஒன்றுமில்லை," என்ற அவர் பொன் மொழிகள் இன்று உலகின் நானா பக்கங்களிலும் ஒலித்துக்கொண் டிரா.

"பெண் வாடை கூடாது; உலகமே மாயை," என்று பொறுப் பைக் கழற்றிக் கொள்வதோ, அமைதியான வாழ்க்கை தேவை யென்று சோம்பிக் கிடப்பதோ, ஆண் மகனுக்கு அழகில்லை.

"உய்யும் வழியுண்டா?" என்ற கேள்வி எழக்கூடாது. மன முண்டானால் இடமுண்டு. "கோழைகள் சாவதற்கு முன்பு பல தடவைகள் சாகிறார்கள்" என்று ஷேக்ஸ்பியர் சொன்னது முக் காலும் உண்மை. இன்றைய மனிதனைப்பற்றியோ, இவ்வுலக வாழ்வைக் குறித்தோ கவலைப்படாத மனிதன், இனி வரும் மனி தனைப்பற்றியோ, பரலோக வாழ்வைப்பற்றியோ பேச அருகதை

யற்றவன். சூறாவளிக் காற்றானாலும், நெல்மணிகளை அடித்துக் கொண்டு போக முடியாது. உருவத்தில் சிறிய மனிதன், யானை முதல் எறும்பு ஈறாகவுள்ள எல்லாச் சீவராசிகளையும் கட்டுப் படுத்துகிறான். மனத்திட்பமும் நுட்பமும் அவனைப் பெரியவ னாக்குகிறது. அவன் கற்பனைக் களஞ்சியம், காவியமும் ஓவிய மும் அவன் கையாட்கள்; பூதங்கள், பொறிகள், புலன்கள் அவன் சேனைப் பெருக்கம்.

"நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்."

என்று வீர முழக்கம் செய்தவர் பலர் உளர். நெஞ்சில் உரம் உள்ள வனுக்கு ஆக்கவும் தெரியும். அழிக்கவும் தெரியும். கனவு காணத் தெரியாதவன் கட்டிக்கிடக்கும் தண்ணீர்; அத்தண்ணீர் தொத்து நோய்க்கு இருப்பிடம்; அதை ஏற்றம் வைத்து இறைத்துக் கொட்டாவிட்டால் பேராபத்து விளையும். கற்கால மனிதன் தொடங்கி பிளேட்டோ, அரிஸ்டாட்டில், சாக்ரடிஸ், வள்ளுவன், கம்பன், ஷேக்ஸ்பியர், ரஸ்கின், காளிதாசன், தாகூர், பெர்னார்டுஷா, ரொம்மெய்ன் ரோலண்டு வரை, மனிதன் கைக்கட்டி யிருக்க வில்லை. உள்ளமும் உடலும் வேலை செய்தன. நேற்று வாழ்ந்த சுப்பிரமணிய பாரதி காணி நிலம் வேண்டிக் கண்ட கனவு, நம்மை யும் கனவு காணத் தூண்டுகிறது. இன்பம் விழைந்து, சுகம் வேண்டிக் கனவு காண்பது, பண்பட்ட உள்ளத்தின் சின்னம். உமர்கய்யாம் அத்தகைய கனவி லாழ்ந்தார்.

நம் போன்றார் பிழைத்துய்யவே "ருபயத்" எழுதப்பட்டது போலும்!

---

## சந்தா நேயர்கள் கவனிக்க

நமது சந்தாதாரர்களில், சிலர் நம்க்கு கடிதம் எழுதும் பொழுது அவர்களுடைய சரியான சந்தா நெம்பரைத் தெரிவிக்காமல், தவறான சந்தா நெம்பரைக் குறிப்பிட்டு எழுதி நமக்கு மிகவும் கஷ்டத்தைக் கொடுக்கிறார்கள். ஆகையால் அவர்கள் இனிமேலாகி லும் இவ்வித தவறு நேராமல் கவனித்து எழுதினால் உடனே பத்திரிகைகள் அனுப்பிவைக்கப்படும்,

மானேஜர்.

# விஞ்ஞானம் கிரேக்க மயமாதல்

டி. பி. நவநீதகிருஷ்ணன்



மெஸொபொர்டேமியா, எகிப்து, இன்னோரன்ன படுகை நாடுகளில் நிறுவப்பட்ட நகரவியல் வாழ்க்கை முறை, அந் நாடுகளின் எல்லைகளுக்கு அப்பாலும், தொலைவாயும் இருந்த நாடுகளிலும் விரவலாயிற்று. அந் நாடுகளில் அதுவரை புதுக்கற்கால வியலான வாழ்க்கை முறையே இருந்து வந்தது. க்ரீட் தீவிலும், கிரேக்க நாட்டிலும், சிறு ஆசியாவைச் சேர்ந்த ட்ராய் நாட்டிலும், இன்னும் பல நாடுகளிலும், வணிக முறையும், சிறப்பியல் தொழின் முறைகளும் நிறுவப்பட்டன. மத்திய தரைக் கடலின் கரையோரங்களிலிருந்த நாடுகளின் நிலைமை, மற்ற நாடுகளினின்று வேறுபட்ட தன்மையானதாய் இருந்தது. அவை, பாபிலோனியாவினின்றும், எகிப்தினின்றும் தொலைவில் இருந்தமையின், அவற்றின் சமூக அமைப்புமுறை, புதுக் கற்கா லத்தினதை யொட்டியதாய் இருந்தது. எனவே, அந் நாட்டினர் புதுக் கற்கால வேளாளரின் சிறப்பியலான பண்புகளுடனிருந்த னர். அவரது நகரியலான வாழ்க்கைப் பகுதிகள், பிற நாட்டின ரிடமிருந்து பரவியவையானமையின், அவை, அவரது சமூக் அமைப்பு முறையில் ஆழ்ந்தூன்றியவையாய் அமையவில்லை. எனவே, மத்தியதரைக் கடலின் கரையோரமிருந்து வந்த மக்கள், எகிப்து, பாபிலோனியா இன்னோரன்ன நாடுகளில் நகரவியல் வாழ்க்கை முறை தலைப்படும் முன்னிருந்ததான நாட்டுப்புற வாழ்க்கை முறை யிருந்த காலத்தே யெழுந்த அருந் தொழின் முறைகளைப் பற்றி ஒருவாறு அறிந்திருந்தனர். மத்தியதரைக் கடலின் கரையோரமிருந்த மக்கள், ஹிடைட்கள், போனிஷியர் கள், கிரேக்கர்கள், என்போராவர். அவர்களது சமூக அமைப்பு முறை, புதுக்கற்காலத்தினரது சமூக அமைப்புமுறையைப் போன்றதொன்று யிருந்தமையின், அந் நாடுகளில், புதுக்கற்கா லத்தில் கண்டுபிடிக்கப்பட்ட புதுமைகளையொத்த புதுமைகளைக் காண்டற்கேற்ற, பிரமேயமிருந்தது. ஹிடைட்கள், இரும்பையும் அதன் பாற்பட்ட தொழில்களையும் பரவச் செய்யலாயினர். போனீஷியர்கள் நெடுங்கணக்கியலான எழுத்து முறையைக் கண்டு பிடித்தனர். கிரேக்கர்கள், பொருள்களைப் பற்றியும் இயற்கை நிகழ்ச்சிகளைப் பற்றியும், காண்பதினின்று கிடைத்த அறிவை மூலமாய்க் கொண்டு தாம் கண்டவற்றிற்கான காரணங் களை யெடுத்துரைக்கும் இயற்கை விதிகளை, சிந்தனை செய்து கண் டுபிடிக்கும் முறைமையைத் தோற்றுவித்தனர். இவ்வகையான முறைமை, 'பொதுவியல் சிந்தனை முறை' யெனப் படுகின்றது. மேற்கூறிய புதுமைகள், நகரியல் வாழ்க்கையில் தோய்வுற்றுத் தம் தனிச் சிறப்பை யிழக்காதவரும், தம்மியல்பாகவே சிந்தனை செய்யும் பண்புத் திறனுடை னிருந்தவரும், ஆனவர்களாலேயே கண்டுபிடிக்கப் பட்டன. பொதுவியலான சிந்தனை முறையும்

எழுத்துப்போன்றே, அறிவை மயக்கும் இயலானது. ஏனெனின், அம் முறைமையிலும், அறிவைக் கொண்டு மட்டுமே, மேலும் மேலும் அறிவை வளர்க்கலாம் என்ற ஏமாற்றும் இயல்பான கருத்து உள்ளது. பொதுவியல் சிந்தனை முறை சரியான வழியிலும் செல்லலாம்; பிழையான வழியிலும் செல்லலாம். ஏனெனில், பொதுவியல் சிந்தனை முறை, முதலான அறிவை மட்டுமே உள்ளவற்றின் பாற்பட்டவற்றினின்று பெறுகின்றது. அவ்வறிவைப் பெருக்கும் வகை, மேலும் காண்பனவற்றின்பாற் படாது, சிந்தனையியல்மட்டுமானதாகவே யுள்ளது. சிந்தனை சரியான வழியே செல்கின்றதா, இல்லையா, யென்பதைச் சோதனை செய்வதற்கான வகை, அம்முறைமையில் இல்லை.

கிரேக்கர், போர் முறையையும், போரில் தோல்வியுற்றவரை அடிமைகளாக்குதலையும், உலோகவாயுதங்களை செய்யும் வழிகளையும், எகிப்தனரிடமிருந்து கற்றனர். எகிப்து நாட்டின் சமூக அமைப்பில் போன்றே, கிரேக்கரது சமூக அமைப்பிலும், ஆட்சியாளர், அடிமைகள் என்ற இருவேருன பகுதிகள் இருந்தன. ஆனுல், அவ்விரு நாடுகளின் சமூக் அமைப்புகளிடை கிரேக்கமுறையில் முக்கியமான வேற்றுமை யொன்றும் இருந்தது. ஆட்சியாளரிடை, மந்திரவாதிகள்—அரசர்கள்—வணிகர்கள்—என்ற பிரிவினையில்லை. அம் முறையில், ஆட்சியாளர் எல்லோரும் சம நிலைமை பெற்றிருந்தனர். ஆயினும், அடிமைகளும், அவர்கள் செய்து வந்த தொழில்களும் இகழப்பட்டே வந்தன. கிரேக்க ஆட்சியாளர், மந்திரத்திலும் சோதிடத்திலும் நம்பிக்கை கொள்ளாதிருந்தனர்.

கிரேக்கர்கள், தொழில் செய்வதை, இகழ்ந்து வந்தாரா்தலின் வினைச்செய் வகைகளின் பாற்பட்ட பூதநூல், இயைபு நூல் இன்னோரன்னவற்றை வளர்க்க, அவர்களால் இயலாதிருந்தது. இயற்கை நிகழ்ச்சிகள் ஒழுங்கான முறையில் நடைபெறுகின்றனவென்பதையும், அவ் வொழுங்கிற்கு மூலமான இயற்கை விதிகளைக் கண்டுபிடித்தலே விஞ்ஞானம் என்றும் ஆன கருத்தை முதன் முதலாய் நிலைநாட்டி, அவ் வகையில் விஞ்ஞான வளர்ச்சிக்குத் துணை செய்தவரில் முதன்மையானவர் தேல்ஸ் என்ற மைலீடஸ் நகரத்துக் கிரேக்கர் மைலீட்ஸ் நகரம் யவன நாட்டிலுள்ளது. அவர் பாபிலோயினிரிடை யிருந்து பரவிய இயற்கை நிகழ்ச்சிகளுக்குக் காரணமானவையான மந்திரவியலான கருத்துக்களையாராய்ந்து, அவற்றிலுள்ள மந்திரத்தையகற்றி, அடிப்படையான இயற்கை யியலான கருத்துக்களைப் பற்றிமட்டும் ஆராயலானுர். இவ்வுலகம் மந்திரவியலான வழியில், நீரினின்று படைக்கப்பட்டது என்ற வரலாற்றை, தேல்ஸ் அறிந்தார்; அவ்வரலாற்றினின்று, நீரினின்று உலகத்தின் நிலம் எழுந்தது என்ற இயற்கையியலான கருத்தை தனிப்படுத்திஞர். இதனின்று, இவ்வுலகம் இடையருது மாறிக்கொண்டிருக்கும் நீரியக்கத்திஞல் தோற்றுவிக்கப்பட்டதொன்று என்ற முடிவை யடைந்து , அக்கருத்தைத் தமதெனத் தேல்ஸ் வெளியிட்டார். படைப்பிற்குக் காரணமான

மந்திர சக்தி யொன்றுண்டு என்ற நம்பிக்கை, தேல்ஸின் கருத்தில் இல்லாதிருப்பதும், குறித்த கருத்தொன்று, குறித்த ஒருவருக்குரிமையானது, என்றகொள்கையும், அக்கருத்தின் பாற்பட்ட பான்மைகளில் புதுவகையானவை. அதுவரை, வினைச் செய்வகைகளான புதுமைகள் கண்டுபிடிக்கப் பட்டபோதே, அவை குறித்த ஒருவரால் கண்டுபிடிக்கப் பட்டவை என்ற உரிமையளிக்கப்பட்டு வந்திருந்தது. தேல்ஸின் கொள்கை வெளிப்பட்ட பின், புதுக் கருத்துக்களைக் கண்டு பிடித்தலிலும் தனிப்பட்ட பெருமையுண்டு என வேற்பட்டது. இவ்வுலகம் மட்டுமேயன்றி, பிரபஞ்சத்திலுள்ள கோளங்கள் எல்லாமும், நக்ஷத்திரங்கள் எல்லாமும், இவ்வுலகம் எழுந்த வகையில் போன்றே, ஒருவகை அடிப்படையான பொருளினின்று தன்னியலாய் எழுந்து வளர்ந்தவை யென்ற கொள்கையையும், தேல்ஸ் வெளியிட்டார். இக் கொள்கை, தற்காலத்து விஞ்ஞான நூலிலுள்ளவற்றிலும, முக்கியமான கொள்கைகளிலொன்றாய் உள்ளது. எனிக்ஸ் மாண்டர் என்ற, மைலேடஸ் நகரத்தினரான மற்றொருவர், 'டார்வின் கொள்கை' யென்று தற்காலத்தில் புகழ்பெற்று விளங்கும் 'பரிணமக் கொள்கை' போன்ற தொன்றை, அக்காலத்தே வெளியிட்டார். உலகிலுள்ள உள் நாட்டிடங்களிலும், கிளிஞ்சில்கள், சேர்மிகள், இன்னோரன்ன கடல் பாற்பட்ட பொருள்கள் கிடைக்கப் படுவதைக் கண்டு, ஒரு காலத்தில் உலகில் பெரும் பாலான பகுதி கடலாயிருந்திருக்க வேண்டுமென்று, அனிக்ஸ் மாண்டர் கருத்துரைத்தார். கடல் பல விடங்களில் வற்றிய போதே, நிலம் ஏற்பட்ட தென்றும், அப்பொழுது சேற்றில் வசித்துவந்த இனமொன்று இறத்தலிலேயே மக்கள் இனம் எழுந்தது எனவும், அவர், அனுமானித்தார். சேறு காய்ந்து, உலர்ந்த நிலம் ஏற்பட்டபோது, அவ்வாறு யேற்பட்ட காய்ந்த நிலத்தில் வாழ்தற்கேற்ற இனமான மக்களினம் பரிணமித்தது என்று, அனிக்ஸ் மாண்டர் கருத்துப் பட்டார். அவர் கூறியதாவது: "மக்கள் ஆரம்ப நிலைமையில், மீனைப்போன்ற இனமாயிருந்தனர். சேற்றிலும், நீரிலும் வாழ இயலாது போனபின், இப்பொழுதுள்ள மக்கள் இனம் தோன்றியது. ஆனால் இப்பொழுதுள்ள மக்களினம் நிலத்தின் மீதுமட்டுமே வாழ் இயன்றுள்ளது; எனவே, முதற்கூறிய மீனினத்திற்கும், இப்பொழுதுள்ள மக்களினத்திற்கும் இடைப்பட்ட இனங்கள் பலவிருந்திருக்க வேண்டும்". அனுக்ஸமெனிஸ் என்ற மற்றோர் இயற்கைத்தத்துவ விஞ்ஞானி (இவரும் மைலேடஸ் நகரத்தினரே), இனங்கள் தம்மியலாய் மாறுதற்குக் காரணம், பிரபஞ்சத்திற்கு அடிப்படையான பொருள் விரிதலும், சுருங்குதலுமே என்று உரைத்தார். ஹெராக்ளிடீஸ் என்ற மற்றோர் மைலீடஸ் வாசி, உலகில் ஒன்றையொன்றை எதிர்த்த ஆற்றல்கள் இரண்டு உள்ளன வென்றும், அவை புலன்களால் அறியப்படா விடினும், வேறு வகைகளால் அறியப்பட இயன்றவை யென்றும், அவ்விரு ஆற்றல்களிடையேற்படும் இழுப்பின் வலிமையில் தோன்றும் மாறுதல்களைப் பொறுத்த வகையிலேயே இவ்வுலகிலுள்ள இனங்கள் உள்ளன

வென்றும், காரணமெடுத்துரைத்தார். இக்கருத்தை மூலமாய்க் கொண்டே, ஹெகல் என்ற பத்தொன்பதாம் நூற்றாண்டு அறிஞர், தம்து தத்துவ வியலான கொள்கையை நிலைநாட்டினார். மேலேடிய நகரத்தினர், தாம் எடுத்துரைத்த தத்துவக் கொள்கைகளை நிலைநாட்டுதற்கானவையான, செயல் முறைச், சோதனைகள் எவற்றையும் செய்யவில்லை. அவ்வாறு செய்தல் அவசியம் என்றும் அவர்கள் கருதவில்லை. அவரது கொள்கைகளின் மூலக் கருத்துக்கள், இயற்கையின் பாற்பட்டவற்றைக் கண்டதால் எழுந்த அறிவாலானவையானமையின், அவை, மந்திர, மருளியலானவையன்று. எனவே, அக்கொள்கைகளை நிலைநாட்டுதற்கென, மேலும் சோதனைகள் செய்தல் அவசியமன்று, என, அவர்கள் எண்ணினர். ஆனுக்ஸ்மேண்டர், கருங்கடலின் கரைகளிலிருந்த கிரேக்க வர்த்தக நிலயங்களைக் குறிப்பிட்ட, நாட்டுப்படம் வரைந்து, நாட்டுப்படம் வரையும் வழியை முதன் முதலாய்க் காட்டினார். தேல்ஸ், வரிவடிவ கணிதத்தின் துணைகொண்டு, கடலில் கப்பல்கள் சென்றுள்ள தூரத்தைக் கணக்கிடும் வகைகளையும், கட்டடங்கள், ஸ்தூபிகள் இன்னோரன்னவற்றின் உயரங்களைக் கணக்கிடும் வழிகளையும், கண்டு பிடித்தார்.

கிரேக்கரிடை, பொதுவியலான சிந்தனை முறை எழுந்து வளர்ந்ததென்பது இயல்பேயாம். அவர்களில், ஆட்சியாளர் வகுப்பைச் சார்ந்தோரெல்லாரும், சமூகத்தில் ஒரே நிலைமையில் இருந்தனர். அவர்கள் மந்திரத்தால் கட்டுண்டவருமன்று. எனவே, அவர்களிடை, கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டபோது, எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட இயற்கையியலான அறிவையொட்டிய காரணங்களைக் கொண்டு வாதங்கள் செய்து. ஒருவரை யொருவர் அறிவுறுத்தி, இணங்கச் செய்வதாலேயே, ஒற்றுமைப்பட்ட கருத்தையடைந்து, ஆட்சிநடத்த இயலும் மந்திர சக்தியால் பெறப்பட்ட ஆணைக்கு எல்லோரும் உட்படவேண்டும் என்றதுபோன்ற பிரமாண வியலான முறையில் கிரேக்க மக்களைப் போன்றவரிடம் ஆட்சி செலுத்த இயலாது.

ஆட்சியில் கலவாத தொழிலாளிகள் அல்லது அடிமைகள் வாழ்க்கைக்கு இன்றியமையாதவையானவை யாவற்றையும் விளைவித்துத்தரும் வகையில் ஏற்பட்ட சமூக அமைப்பு முறையிலேயே, ஆட்சியாளர் வகுப்பினர் சம நிலைமை பெற்று ஆள இயலும். எனவே, இவ்வகையான ஆட்சி முறையில், ஆட்சியாளரிடை சம நிலைமையுள்ளதேயன்றி, நாட்டிலுள்ள மக்களெல்லோரும் சம உரிமை பெற்றவரன்று. இவ்வகையான ஆட்சிமுறையையே, இக்காலத்து ஜனநாயக ஆட்சி முறை பின்பற்றுகின்றது. எனவே, அம்முறையில் சிலரிடை சம உரிமையுள்ளதேயன்றி, அம்முறை பொதுமக்கள் எல்லோரிடையும் சம உரிமை யேற்பட்டுள்ள பான்மையானதன்று. அம்முறை தொழிலாளிகளைத் தாழ்ந்த நிலைமையில் இருத்தும் தன்மையானது. எனவே உண்மையில் பொதுநலம் பேணுவதன்று. அம்முறை பரவுவதால், உலகில் எல்லோரும் நல்வாழ்க்கை பெற்று வாழ்வார்கள் என்று எண்ண இடமில்லை.

பிரிந்த காதலரின் உள்ளத்தில் என்னென்னவோ விந்தைகள் நிகழ்கின்றன...... மங்கையின் உள்ளத்தில் மாலைப்பொழுது பகலில் வந்துவிட்டதுபோல் தோன்றியதில் வியப்பில்லை.

# காலையில்—மாலை?

தி. சி. குழந்தைவேலன்



மின்னற் கொடிதான் விண்ணிலிருந்து நழுவி மண்ணில் விழுந்து விட்டதா? மேனகை தான் இந்திர சபையை வெறுத்து இறங்கி இங்கு வந்து விட்டாளா?

இப்படி அறிவைக் கலக்கி வியப்பில் வீழ்த்திவிடுகிருள், அழகுக் குவியலாய் அமர்ந்திருக்கும் அம் மடமங்கை. உப்பங்கழிக் கரையில் உட்கார்ந்திருப்பதால், கடல் தெய்வந்தான் கன்னியுருக் கொண்டு கண்கொள்ளா வனப்புடன் காட்சியளிக்கிறதோ என்றும் திகைக்க வைத்து விடுகிருள். ஆனல், சோகமெல்லாம் திரண்டெழுந்த வடிவமாய்த் தோன்றுகிருள், அசோக மரத்தினடியில் அமர்ந்திருந்த சீதையைப்போல.

எழிலரசியாய் இலங்கும் அவளுக்கு அப்படி என்ன நேர்ந்து விட்டது? பட்டப் பகலில் இங்கு வந்து உட்கார்ந்திருப்பதன் நோக்கந்தான் என்ன?

வேருென்றுமில்லை; காதலனைப் பிரிந்த கலக்கந்தான் அவளுக்கு. காதலன் வேற்றூர் சென்று விட்டான். தன் பிரிவால் காதலி துயரடைவாள் என்பது அவனுக்குத் தெரியும். ஆயினும் கடமை பெரிதல்லவா? போர்புரியப் போய்விட்டான்,— காதலி தனித்திருக்கிருள். அவளைத் துன்புறுத்துகிறது, காதல் நோய்.

இது, காலையிலே அரும்பும்; பகலிலே போது ஆகும்; மாலையிலே மலரும். இந்நோய் கொண்ட அவளுக்கு இரவில் கண்ணுறக்கம் ஏது? ஊராரெல்லாம் தூங்குவார்கள்; விலங்கு, பறவைகளெல்லாம் கண்ணுறங்கும். ஆனல், காதலியின் கண்ணிமைகள் ஒன்ருேடொன்று ஒட்டமாட்டா. இதைவிட வேறு என்ன துன்பம் வேண்டும் அவளுக்கு? ஆகையால், மாலைக் காலத்தை எண்ணினலே போதும். அவள் நெஞ்சு பகீரென்று பற்றும். ஏன்? மாலைக்குப் பிறகு தானே அக்கொடிய இரவு வருகிறது? இந்த நிலையில் ஒரு நாள் கழிவது ஒரு யுகமாகவே தோன்றுகிறது அவளுக்கு!

பகல் வேளையில் தலைவனையே நினைந்து புலம்பும் அவள், மாலையில் மன ஆறுதலின் பொருட்டுச் சுனைக்கரையிலும் உப்பங்கழிக் கரையிலும் சென்றிருப்பது வழக்கம். ஆனல், இன்று தனிமைத்

துன்பம் மிகவும் வருத்தியதால், வழக்கத்திற்கு முன்பாகவே—பக லிலேயே—வந்து இயற்கைக் காட்சிகளைக் காணலானாள்.

நீலத்திரைக் கடலின் கோலத்தில் மனத்தைப் பறிகொடுத்து மணிக் கணக்காய்த் தன்னை மறந்து நிற்கும் இயல்புடையவள் அவள். ஓயாது வந்து கரையில் மோதும் அலைகளை நோக்கிய வண்ணம் சிந்தனையுலகிற் சென்று ஆழ்ந்து நின்று விடுவது முண்டு. உப்பங்கழியிலுள்ள நெய்தல் மலர்களைக் கண்டு அவள் முகமும் மலரும்; நாரைகளைக் கண்டு களிப்பாள்; பிடிப்பதற்காக அவற்றின் அருகிற்போய் அவை அஞ்சியோடுவதைப் பார்த்து கெக்கலி கொட்டி நகைப்பாள். ஆனால், இன்று ஒன்றிலும் அவள் பார்வை பதியவில்லை. உப்பங்கழிக்கரையில் வந்து உட்கார்ந்து விட்டாள். ஊனக்கண் ஒன்றையும் நோக்கவில்லை என்பது உண் மைதான். ஆனால் மனக்கண் விழிப்பாக வேலை செய்கிறது!

காதலன் தன்னிடம் முன்பு ஒழுகிய இன்ப நிகழ்ச்சிக ளெல் லாம் ஒன்றன்பின் ஒன்றாய் அவள் உள்ளத்தில் உருப்பெற்று மாறி மாறித் தோன்றி இன்பம் செய்கின்றன, படக்காட்சிபோல. ஒரு நொடியில் இவை மறைகின்றன. பிரிந்த காதலன் மீண்டும் வருகிறான். எதிர் சென்று அவனைக் கண்டு களிகூர்கிறாள், காதலி. பிறகு, காதலர்கள் கூடி மகிழ்கிறார்கள். இது அடுத்த காட்சி. இப்படி அடுத்தடுத்து எத்தனையோ இன்பக்காட்சிகள். இடையிடையே துன்பக் காட்சிகளும் தோன்றும். என் செய் வாள்? பிரிந்த காதலனின் பின்னால் தன் மனத்தையும் போக்கி விட்டாள் அப்பேதை!

அவள் வந்து உட்கார்ந்து நெடுநேரமாய் விட்டது. அதை அவள் உணர்ந்ததாகத் தெரியவில்லை. அசையாமல் ஒரே நிலை யில் இருக்கிறாள். உடம்பு அசையவில்லை; உள்ளம்தான் அசை கிறதே! நேரம் போவது எப்படித் தெரியும்?

பறந்து செல்லும் நாரையொன்று கத்தியது. அச் சத்தம், அவளை விழித்து வெளியுலகத்தைப் பார்க்கச் செய்தது. நாற் புறமும் சுற்றிப் பார்க்கிறாள். அவள் முகத்தில் வியப்பின் குறி படர்கிறது; அச்சத்தின் அறிகுறியும் அத்துடன் கலக்கிறது.

"நான் பகற்பொழுதில் அல்லவா இங்குவந்தேன்! அதற்குள் மாலைநேரம் வந்துவிட்டதே! இஃதென்ன விந்தை! நான் வந்து கொஞ்சநேரம் தானே ஆயிற்று!" என்று முணுமுணுக்கிறாள். உப்பங்கழியிலுள்ள நெய்தல் மலர்கள் இதழ் குவிந்திருப்பதைக் காண்கிறாள். காலையில் மலரும் நெய்தல் மலர் மாலையில் கூம்பும் என்பதை அவள் அறிவாள். அவளுக்கு ஐயமின்றித் தெரிந்து விட்டது, மாலைக் காலந்தான் வந்துவிட்டது என்று. 'இரவு என் னும் எமன் இதோ வந்து விட்டான் என்பதை முன்னமேயே அறி விக்கும் தூதன் அல்லவா இது!' என்று எண்ணியதும் அவள் இதயம் சோர்ந்துவிட்டது; உடல் தளர்ந்து விட்டது. கோபம்

பீறிக்கொண்டு எழுகிறது மாலைப் பொழுதின் மீது. நிந்தையாகப் பேசுகிருள்.

"மாலைப்பொழுதே! உனக்கு இரக்கமே கிடையாதோ? என் காதலர்—குளிர்ந்த கடற்கரையிலுள்ள நாட்டின் தலைவர்—என்னைப் பிரிந்து சென்றிருக்கிருர். இப்பொழுது பிரிந்தாரை வருத்தும் நீ, இதுதான் சமயமென்று உன் விருப்பம்போலெல்லாம் வந்து துன்புறுத்தலாமென்று எண்ணியிருக்கிருயா? கேள்வி முறையே கிடையாதுபோலிருக்கிறதே! வழக்கம்போலவே வருகிருயென்று எல்லோரும் நினைக்கும்படி கடும்பகலிலேயே வருகிருயே! இந்த ஏமாற்று வித்தையை எங்கே கற்ருய்? உன் முறை கேட்டைக் கேட்பார் ஒருவருமில்லையா? இதோ வளைந்து செல்லும் உப்பங்கழியிலுள்ள நெய்தல் மலர்கள் குவிந்து விடும்படி இனி, நீ காலையிலேயும் கூட வருவாய்போலிருக்கிறதே! அப்படி வந்தாலும் உன்னைத் தடுப்பார் யார்? ஒருவருமில்லை!"

"தண்கடல் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையில்
கடும்பகல் வருதி, கையறு மாலை!
கொடுங்கழி நெய்தலும் கூம்பக்
காலை வரினும் களைஞரோ இலரே!"

[சேர்ப்பன்—நெய்தல் நிலத் தலைவன்; பண்டையில்—முன் வருங்காலத்தில் வந்தாற்போல; வருதி—வருகிருய்; கையறு மாலை—செயலறுதற்குக் காரணமாகிய மாலைக் காலமே!; கொடுங்கழி—வளைந்து செல்லும் உப்பங்கழி; கூம்ப—குவிய; களைஞர்—விலக்குவோர்.]

மாலையை நிந்திக்கிருளா, தன் மன வேதனையை வெளியில் கொட்டுகிருளா? ஒரு குற்றமும் புரியாத மாலைக் காலம் அவளுக்குப் பெருங் குற்றவாளியாகவும் கொடுங்கோல் அரசன் போலவும் தோன்றுவது ஏன்? காதல் செய்யும் விளையாட்டா இது? பிரிந்த காதலரின் உள்ளத்தில் என்னென்னவோ விந்தைகள் நிகழ்கின்றன! சந்திரன் நெருப்பாய்க் காய்கிருன்! தென்றல் சுடுகிறது! சந்தனம் செந்தீயாய்க் காந்துகிறது! இப்படிப் பொருள்களின் நிலையே திரிந்துவிடுகின்றனவே, பொழுதின் நிலைதானு மாறியதாகத் தோன்ருது? மங்கையின் உள்ளத்தில் மாலைப் பொழுது பகலில் வந்துவிட்டதுபோல் தோன்றியதில் வியப்பில்லை. "காலையிலும் வருவாயோ" என்று வினவுகிருளே. அதில், அவள் உள்ளத்தின் உணர்ச்சி பொங்கிய வியப்புடன் குளிர்கிறதல்லவா? காதலியின் பிரிவாற்ருமையை எவ்வளவு நன்ருய் எடுத்துக் காட்டுகிறது, இச் செய்யுள்!

---

# இந்தியரின் ஆகாரப் பிரச்னை

ஸ்ரீ. வீ. சங்கரய்யர்



நம் நாட்டில் ஏழைகளுக்கு நல்ல ஆகாரம் புசிக்கக்கூடிய வசதி மிகக் குறைவு. இதற்குக் காரணம் நம் நாட்டின் தரித்திர நிலைமையே யாகும். குழந்தைகளுக்கு தினம் ஒன்றுக்குக் குறைந்த பக்ஷம் கால் படி பால் கொடுக்க வேண்டும். அவ்வளவு பால் கொடுக்க முடியாத பக்ஷம், மோராவது அதிகமாக கொடுக்க வேண்டும்.

கால்சியம் (சுதையம்), பாலிலும் மோரிலும், பசலிக்கீரை, வெந்தியக்கீரை, முருங்கக்கீரை, கீரைத்தண்டு இவைகளில் அதிகமாக இருக்கின்றன. இது அரிசிமாவில் மிகச் சொற்பம்.

மில்லரிசியை உபயோகிப்பவர்கள், கேழ்வரகையும், கம்பையும் ஏராளமாக உபயோகிக்க வேண்டும். பச்சைக் காய் கறிகளையும் பழங்களையும் அதிகமாக சேர்த்துக் கொள்வதால் தான் குணம் அடைய முடியும்.

மில்லில் தீட்டப்பட்ட பச்சரிசியிலுள்ள அவ்வளவு கெடுதல் மில்லில் தீட்டப்பட்ட புழுங்கல் அரிசிக்குக் கிடையாது. புழுங்கலரிசி பெரிய பெரிய வியாதியைக் கூட நீக்குகிறது.

குழந்தைகளுக்குக் கொடுக்கின்ற ஆகாரத்தில் எண்ணெய், அல்லது நெய் அதிகமாக சேர்ப்பது மிகவும் நலம். அரிசிச் சோறு உண்போர் அதிகமாகப் பருப்பும், நெய் அல்லது எண்ணெயும் சேர்த்து உண்ணவேண்டும். நிலக்கடலையை உபயோகிப்பதும் நல்லதே. இதில் வைட்டன் பி அதிகம் இருக்கிறது. தினம் ஒரு அவுன்ஸ் நிலக்கடலை சாப்பிடுவது நல்லது. சாப்பிட்டதும் கொஞ்சம் வெல்லக்கட்டியையும் சாப்பிட வேண்டும.

குழந்தைகளுக்கு வாழைப்பழம் தினமே கொடுப்பது குணமுண்டு; ஆனால் ஆரஞ்சு, தக்காளி இவைகளைக் கொடுப்பது மிகவுல் நல்லது. பேரீச்சம்பழம், கிசுமிசுப்பழம், தேன் இவைகளையும் கொடுக்கலாம்.

நாம் உபயோகிக்கும் பாத்திரங்களாலும் ஆகாரம் கெட்டு விடுகிறது. மண் பானைகள், கல் சட்டிகள், எனமல், அலுமினியம், பீங்கான், பித்தளை, செம்பு, ஈயப் பாத்திரங்கள் சமையலுக்கு உபயோகிக்கின்றோம். மண் பாத்திரங்கள் சீக்கிரம் உடைந்து விடும். அடிக்கடி தேய்த்து வெயிலில் வைக்கவேண்டும். கற்சட்டிகள் மிகவும் உத்தமம். இவைகளால் யாதொரு கெடுதலும் இல்லை. எனமல், பீங்கான் பாத்திரங்கள் நல்லதல்ல.

கூடிய மட்டும் உலோகப் பாத்திரங்களை உபயோகிப்பதை தவிர்க்கவேண்டும். உலோகங்களில் காற்றும் தண்ணீரும்பட்டால் அவற்றிலிருந்து சிறு அணுக்கள் வேறு சில விஷமய பதார்த்தங்களாக மாறுகின்றன. ஆகாரத்தை அவை விஷமயமாக்குகிறது. அதனால் பல வியாதிகளும் உண்டாகிறது. எல்லா உலோகப் பாத்திரத்தையும்விட காரீய பாத்திரங்கள் அதிகக் கெடுதலைக் கொடுக்கிறது. காரீய விஷம் கொஞ்சம் கொஞ்சமாக தேகத்தினுள் சென்று காலகிரமத்தில் இரத்தமின்மை, வயிற்றுவலி, மலச்சிக்கல், தலைவலி, முதலிய பல வியாதிகளை உண்டாக்குகிறது. செம்பும் பித்தளையும் வெள்ளீயம் பூசியபின் உபயோகிக்கலாம். வெள்ளீயத்தையே உபயோகித்து ஈயம் பூசவேண்டும்; காரீயமோ நாகமோ சேர்த்துப் பூசிவிடக் கூடாது. இது விஷயத்தில் அதிக் ஜாக்கிரதையாக யிருக்கவேண்டும் இது விஷயமாக சென்னை சர்க்கார் ஓர் அறிக்கையும் ஜனங்களின் நன்மைக்காக வெளியிட்டிருக்கிறார்கள்.

அநேக உணவுப்பொருள்களை வீணாக்குகின்றார்கள். நகரங்களில் தான் அதிகமாக பதார்த்தங்களை வீணாக்குகின்றார்கள். சாப்பிடும் பதார்த்தங்களை வீணாக எறியக் கூடாது என்பதை அறியவும்.

நகரங்களில் இவ் விஷயத்தை சுலபமாக பிரசுரங்கள் மூலம் விளம்பரம் செய்வது அவசியமாகும். எத்தனை ஏழைகள் உணவுப் பொருள் கிடைக்காமல் மிகக் கஷ்டப்படுகிறார்கள். பணக்காரர்கள் எறிந்துவிடுவதற்காக இலையில் நிறையப் போட்டுக் கொள்ள வேண்டுமென்று ஒரு மூடக்கொள்கை யிருக்கிறது. இம் மாதிரி சில மூட நம்பிக்கைகள் சிரார்த்தங்களிலும் பிராம்மணர்கள் அனுஷ்டிக்கிறார்கள். வீட்டிலானாலும் சரி, ஹோட்டல் முதலிய இடங்களிலும் சரி, உணவு பொருளகளை எறியக் கூடாது. அதி சீக்கிரத்தில் நம் நாட்டில் உணவுக்கு தட்டு ஏற்படும் போலத் தெரிகிறது. ஆகையால் உணவுப் பொருள்களை எறியக்கூடாது; அதிகமாக உற்பத்தியும் செய்யவேண்டும். கல்யாண காலங்களில் மட்டும் எவ்வளவு உணவுப் பொருள்கள் வீணாகின்றன. இவ் விஷயத்தை கல்யாண வீட்டுக்காரன் சொன்னால் அவனை லோபி என்பார். கல்யாணம் முதலியவைகளுக்குச் செல்லும் இதரர்களே இதைச் சீர்திருத்த வேண்டும்.

---

## அதிர்ஷ்டசாலிதான்

ஒருவன்:—என் மனைவியிடம் ஏதாவது சொன்னால் உடனே சண்டைக்கு வந்து விடுகிறாள்.

மற்றவன்:—"என்னை விட நீர் அதிர்ஷ்டசாலிதான். ஒன்றும் சொல்லாம லிருக்கும் பொழுதே என் மனைவி சண்டைக்கு வந்து விடுகிறாள்.

—வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி.

**முதலில், தன்னைப் பொறுத்த மட்டிலும் நிகரற்ற கம்பீரம், அப்புறம், தன்னிகரற்ற வீரனையும் கொடுத்தது. அப்படிப்பட்ட கடலுக்கு செருக்கு இராதா ! ஆகவே, நியாயமானது என்று நாம் பாராட்டக்கூடியது.........**

# கடலின் செருக்கு

ரா. பா. மு. கனி



மாலையின் மாய்ர் ஜாலங்களில் மயங்கித் தான் போலும், இரு காதலிகளை மகிழ்விக்க முயலும் காதலன் போல் வான வளையத்தை முத்தமிட்டு, கரையை அலைக்கை கொண்டு கட்டி யணைத்து உல்லாசமாக் விளையாடுகிறது கடல்! துள்ளி வரும் அலைகளிலே மாலை வெயிலின் மங்கிய ஒளி, வர்ண விசித்திரங்களை வாரி வீசச் செய்து, கருதரிய் கடலாடைக்கு வண்ணப் 'பார்டர்' வகுத்து நிற்கிறது. 'மோகனமாஞ் சோதி பொருந்தி முறை தவறு, வேகத் திரைகளினால் வேதப் பொருள் பாடு' கிறதா கடல்? ஆமாம். அதோ 'எற்றி நுரை கக்கி' எழுகின்ற அலை ஒல்லென் றிசைக்கும் பாட்டிலே அம்மையின் ஓம் எனும் பெயர் ஒலிக்கக் கேட்கிறேன்.

எல்லை இல்லாத பெருங் கடல் என்முன் எழுந்து எழுந்து அடங்கிக் கொண் டிருந்தது. மனிதனின் இன்ப துன்பங்களைப் போல, அதன் கம்பீரமும் அலைகளும் என் 'உலர்வும் மனச் சிறு புள்ளினை' எண்ண அலைகளால் எழுப்பி ஓட்டின; புதுப் புது உணர்ச்சிகளை, நவ நவமான இன்ப ஊற்றுக்களைத் திறந்து கொட்டச் செய்தன.

காதல் வெறி கொண்ட காதலன் ஏன் தான் இந்த நெரித்த திரைக் கடலில் தன் இன்பக் காதலியின் இன்முகங் காணமாட்டான்! நீலக் கடல் அலையில் அவள் நீண்ட குழல் காணமாட்டான்! அந்த நீலமேகச் சியாமள மேனியானையும் அல்லவா கடல் நிறக் கடவுள் என்றார்கள்?

தூரத்தே கட்டு மரம் ஒன்று கடல் அலைகளின் இடையே, லக்ஷிய மற்றுக் காற்றி லாடும் மொட்டைப் பனையை யொட்டித் தள்ளாடிற்று. வீரத் திரைகொண்டு கடல் விண்ணை இடித்தது. கட்டு மரம் கவிழ்ந்து திரும்பிற்று. அந்த வெல்ல இயலாக் கடலை, அதன் பயங்கரத்தை, அது தன்னகத்தே ஏற்றுக்கொள்ளும் எண்ணற்ற உயிர்ப் பலிகளைக் கண்டு தான் பைரன் என்ற ஆங்கிலக் கவிஞன் அதைத் தன் கவிதை யழகு தோன்றப் புகழ்கிறான் போலும்.

பைரன் சொல்கிறன் :

"அலை யெறி !
ஆழ்ந்து இருண்ட நீலக் கடலே, அலை யெறி !
எண்ணற்ற கப்பல்கள் நின்மேல் பயனின்றி உழன்றன.
மண்ணை மானிடன் அழிவிட மாக்குகிறன்,
அவன் பலம் மண்ணேடு சரி ;
அலைகளின் மேல் அழிக்குந் தொழிலோ,
முற்றும் நின்னது.
சாவு மணியின்றி, சாமக்கிரியை யின்றி, சவக்குழியின்றி
ஒருக்கண மழைத் துளிபோல்
குமிழிடும் முணக லோடு
நின் ஆழத்துள் ஆழ்கையிலே
அவன் அழித்தநின் நிழல் கூடத் தங்குவதில்லை,
அவன் அழிவைத் தவிர.
எல்லாம் உன்னுடையதே !"

என்ன கோரமான கடல்! எத்தனை யெத்தனையோ உயிர்களை உட் கொள்கிறது ; ஆயினும் எத்தனையோ உயிர்கட்கு இருப்பிடமாக அமைகிறது. உலகை அழிக்கவுஞ் செய்கிறது, ஆக்கவும் உதவுகிறது. காற்றின் மூலம் உலகிற்கு உயிர் கொடுக்கும் உயிர் அது ! அது மாரி தராவிட்டால் வளங் குன்றும் : ஏரின் உழார் உழவர்.

குழந்தை யுள்ளம் படைத்த கவிஞன் ஒருவன் இக் கடலைப் பார்த்து எவ்வளவு ஆச்சரியப் படுகிறன் !

எல்லை அறியாப் பெருங் கடலே ! நீதான்
இரவும் உறங் காயோ ?
அல்லும் பகலும் அலைகடலே ! உனக்(கு)
அலுப்பும் இலையோ, கருங் கடலே !

அலுப்பாவது, கடலுக்கா ? இன்றல்ல எத்தனையோ நூற்றாண்டுக்ளாகக் கடல் இப்படித்தான் கும்மாள மிடுகிறது. இரவென்றும் பகலென்றும் பாராமல். சுமார் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் ஒரு புலவர் பார்த்தார். கடல் குதித்துக் கூத்தாடிக் கொண் டிருந்தது, கரகமாடும் குடிகாரனைப் போல. ஆழி வாயின் அடங்காச் சத்தம் புலவர் சிந்தையைத் தூண்டிவிட்டது. அலையை வாரி வாரி எறிந்து, புது வாழ்வு வந்த புதுப் பணக்காரனைப்போல், அது ஏன் விளையாட வேண்டும். இரவில் கூடத் தூங்காமல் ?

'கங்குலும் நண்பகலும் துஞ்சா இயல்பிற்றய்
மங்குல் சூழ் அலைகடல் ஆர்ப்ப தூஉம்—'

ஆமாம் ஆர்க்கிறது, ஏன் ? 'அதற்குக் காரணம் உண்டு' என்கிறர் புலவர். கதையை நினைத்துப் பார்க்கிறர். அந்நாட்டு அரசன்

இருக்கிறானே அவன் போர் முகத்தில் எவர் வரினும் புறங் கொண்டு செல்லச் செய்பவன். வாரி வழங்கும் வள்ளல். புலவர் போற்றும் பெருந்தகை. புகழ் பரந்த புரவலன். அவனுடைய பிறப்பு விசித்திரமானது. தமிழரசன் ஒருவன் வங்கம் ஏறிக் கடலில் சென்றான் எதிர்ப்பட்ட தீவுகளை வென்றான். அத் தீவகங் களில் ஒன்றில் இருந்த அழகில் சிறந்த அரச குமாரியின் உள்ளத் தையும் வென்றான். அவள் கணவனாய்ச் சிலகால மிருந்து நாடு திரும்பினான். மாதங்கள் சில உருண்டன. அரச குமாரி அழகிய ஆண் மகவின் தாயானாள். குழந்தை பிறந்தால் தன்னிடம் அனுப்பிவிட வேண்டு மென்பது கணவனின் கட்டளை. ஒரு தோணியில் குழந்தையைக் கிடத்திக் கடலில் விட்டு விட்டாள். கடல் தன் மெல்லிய அலைகளால் அதைத் தள்ளிக்கொண்டு வந்து தமிழகத்தின் கரை சேர்த்தது. குழந்தை அரசன் கைக் குப் போயிற்று. அதன் முகத்தி லிருந்த களை அதை அரசன் வீட்டுக் குழந்தை யாக்கிற்று. பின் அதன் திறமை அதை அரச னாகவும் ஆக்கிற்று. அந்த அரசன் தான் இப் புலவர் காலத் திலே புகழ் ஓங்கி நின்றவன். கடல் தந்ததால் இளந் திரையன் எனப் பெயர் பெற்றான். பெருங் காவியங்களுக்குப் பாட்டுடைத் தலைவனாக விளங்கினான் அத் தொண்டைமான் இளந்திரையன். மக்களின் உள்ளங் கவர்ந்த மகிபன். அயல் நாட்டு அரசர்களும் அவன் ஆக்கினைக்கு அடி பணிந்தனர். இத்தகைய தோன்ற லைத் தந்த பெருமை தனக்குத்தான் என்றல்லவா கடல் இப்படிக் குதிக்கிறது என்று சொல்கிறார் புலவர்.

"— வெஞ்சின வேல்
கான் பயந்த கண்ணிக் கடுமான் திரையனை
யான் பயந்தேன் என்னும் செருக்கு."

என்ன செருக்குப் பாருங்கள்! "பெரும் வீரன், பகைவரைப் போரில் நடுங்கச் செய்யும் புலி என்றெல்லாம் திரையனைப் புகழ் கிறீர்களே, அவனைத் தந்தது யார் தெரியுமா? நான் தான்" என்று மகிழ்ச்சி பொங்கச் சொல்லித் துள்ளுகிறதாம் கடல்! என்ன அற்புதமான பாடல்! உள்ள உணர்ச்சியோடு எழுகிறது, கடல் அலைகளைப் போல் அலை எறிந்து. இதோ முழுப் பாட்டும்:

கங்குலும் நண்பகலும் துஞ்சா இயல்பிற்றாய்
மங்குல்சூழ் அலைகடல் ஆர்ப்பதூஉம்—வெஞ்சினவேல்
கான்பயந்த கண்ணிக் கடுமான் திரையனை
யான்பயந் தேன் என்னுஞ் செருக்கு!

அதோ அலைமோதிச் சிதறும் போதே கடல் பேசுகிறது—இல்லை, பாடுகிறது—'யான் பயந்தேன்' என்று செருக்கோடு.

# மருட்சியும் ஊழும்

**சு. அ. இராமசாமிப் புலவர்**



சென்ற ஆனிமாத இதழில் வித்துவான் வெ. சு. சுப்பிரமணியாச்சாரியார் P. O. L. எழுதியுள்ள, 'சிலப்பதிகாரமும் ஊழ் வினையும்' என்னும் கட்டுரையையும், அதற்கு மறுப்பாக வித்துவான் S. P. கெம்பீர நைனுர் எழுதிய 'சிலப்பதிகாரமும் சிலம்பும்' என்னும் கட்டுரையையுங் கண்டனம்.

ஐம் பெருங் காப்பியங்களில் சிலப்பதிகாரந்தான் சீர்த்தி மிக்கது. ஐம் பெருங் காப்பியங்களே யன்றிப் பிற சங்க நூல் பலவற்றைத் துருவி யாராயினும் சிலப்பதிகாரம் போன்ற அரிய பெரிய செந்தமிழ்ச் செல்வத்தைக் காண்டல் அருமையினும் அருமை.

சிந்தாமணி, மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி ஆகிய நான்கும் சிலப்பதிகாரத்துடன் உடன் வைத் தெண்ணப்பட்டனவா மாயினும், இவை யனைத்தும் செஞ்சொற் சுவையில் சிலப்பதிகாரத்திற்குப் பிற்பட்டனவேயாம்.

சிலப்பதிகாரக் கதையைப் பாமர மக்கள் முதல், புலவர் வரையில் அனைவரும் நன் குணர்வர். சிலப்பதிகாரக் கதையைப் பொய் யென இதுவரை எந்தத் தமிழ் மக்களும் எண்ணினரல்லர். இனி எண்ணுவாரு மல்லர்.

சிலப்பதிகாரம், கோவலன் மீது அடாப் பழி சுமத்தி அநியாயமாகக் கொலை புரிவித்த பொற் கொல்லனை, அரண்மனைச் சிலம்பைத் திருடிய கள்வனென்றும், அநியாயக் கொலைகாரன் என்றும் கூறுகின்றது. நெடுஞ் செழியன் கொடுங்கோலால் இறந் தொழிந்த பிறகு கொற்கையி லிருந்த இளஞ் செழியன் அரியணை யேறி, ஆயிரம் பொற் கொல்லர்களைக் கண்ணகிக்குப் பலி கொடுத்ததாகவும் கூறுகிறது. இங்ஙனம் இளஞ்செழியன் பலி கொடுக்கக் காரணம் கோவலன் கொலைக்குப் பின் அந்நாட்டிலே மழை வளங் குறைந்து பிற நல மிறந்து பெருங் கேடுண்டானமையேயாம்.

இச் செய்திகளைப் படிக்கும் ஒவ்வொருவருக்கும் பொற் கொல்லர் வகுப்பின ரிடத்தில் சிறிது வெறுப்பு ஏற்படத்தான் செய்யும். துறவியாக விளங்கிய இளங்கோவடிகள் மக்களுக்கு வீணே ஒரு வகுப்பினரிடை வெறுப்பேற்படுத்தும் புனைந்துரைக் காதையைச் செய்யத் துணிந் திருப்பாரா?

மணிமேகலை, சிலப்பதிகாரத்தின் தொடர் பென்பது யாவரு மறிந்த தொன்று. சிலப்பதிகாரம் பொய்யானல் மணிமேகலைக் காதையும் பொய் தான். பிறகு இவற்றோடு சேர்ந்த சிந்தாமணி,

வளையாபதி, குண்டலகேசி முதலியவைகளின் கதிகளும் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவற்றின் கதியேயாம்.

தற்கால உலகில் கற்பனைத் திறமும் பொய்க் கதைகளும் மலிந்து வருகின்றன. காகிதத்தையும் பென்சிலையும் வைத்துக் கொண்டு எது வேண்டுமானாலும் மனம் போனபடி எழுதலாம். ஓலையில் எழுத்தாணியால் எழுதப்பட்ட அக்காலத்தில் புனைந்துரைக் காதைகட்குப் பெரும்பாலும் இட மளிப்பதில்லை. சங்க காலத்திலும் அதற்கு முன்னும் பின்னும் நடைபெற்றதாகக் கூறப் பெறும் செய்திகள் பெரும்பாலும் உண்மையில் நடந்தனவேயாம்.

அன்பர் ஆச்சாரியார், பொற்கொல்லன், பாண்டியன், மாதவி ஆகியோருக்கு ஊழ் அகப்படாமை ஒன்றைத்தான் சிலப்பதிகாரம் பொய் யென்பதற்கு ஆதாரமாக எடுத்துக் காட்டுகின்றார். நூல்களில் வரும் ஒவ்வொருவருக்கும் ஊழ் சொல்லித்தான் ஆக வேண்டு மென்னும் நியதியை யாம் யாண்டுங் காண்கின்றோம் இல்லை. ஒரு சிலருடைய் ஊழ் வெளிப்படையாக் உரைக்கப் படாமை கொண்டு ஒரு பெருங் காப்பிய நிகழ்ச்சி முழுவதையும் பொய்யென்று துணிய முடியாது. சிலப்பதிகாரம் எந்நோக்கத்தோடு இயற்றப்பட்டது என்பதனை வித்துவான் கெம்பீரனைனார் விளக்கி யிருக்கிறார்.

ஒருவன் தனது ஊழை அனுபவித்தற்குப் பலர் காரணமாக விருக்கலாம். கோவலன் ஒருவன் தனது ஊழை அனுபவித்தற்கு எத்தனையோ பேர் காரண மாகின்றனர். ஊழ் சொல்லத் தொடங்கினால் அதற்கு முடிவே ஏற்படாது. ஆயிரம் பொற் கொல்லர்கட்கு ஊழ் சொல்ல வேண்டும். பொற் கொல்லன் சிலம்பினைத் திருடியதற்குக் கூடத் தனியே ஒரு ஊழ் சொல்ல வேண்டும். கோவலனுக்கு மதுரையில் இடம் கொடுத்த மாதரிக்கு ஊழ் சொல்ல வேண்டும். கோவலனோடு வழித்துணை வந்த கவுந்தியடிகட்கு ஊழ் சொல்லவேண்டும். இப்படி எத்தனையோ பேருக்கு ஊழ் சொல்ல நேரும். எல்லா நிகழ்ச்சிக்ட்கும் கோவலன் ஊழ் ஒன்றே காரணமாதலின் ஆசிரியர் எல்லோருக்கும் ஊழ் சொல்லும் வினையில ஈடுபடவில்லை.

மேலும், சிலப்பதிகாரத்தில் பொற் கொல்லன் நிகழ்ச்சி ஒன்றைக் கொண்டு உலகினர், உலகிலுள்ள பொற்கொல்லர் அனைவரும் தீயோரென முடிவு கட்டிவிட மாட்டார்கள். உலகில் நல்லோர் பொல்லோர் எல்லோருந்தான் இருப்பார்கள். தம் சமூகத்தினருக்குப் பெரிய இகழ்ச்சியைச் சிலப்பதிகாரந் தந்து விட்டதென்று அன்பர் ஆச்சாரியார் அவர்கள் வீணே மனங் கவன்று, பொய் யென்று நிலைநாட்ட முயன்று, ஆதாரந் தேடி, யாதும் அகப்படாமையின் ஊழோடு சென்று முட்டிக்கொண்டு அவதியுற வேண்டியதில்லை. ஆச்சாரியார் மனதில் உறுத்தும் உறுத்தல்களுக்குச் சிலப்பதிகாரம் காரணமன்று. அவர் தம் மன மருட்சியேயாம்.

**அவனுடைய வாழ்க்கையே ஒரு சோகம் நிறைந்த காதல் கதை. கதை கேட்க வந்த ஒரு குழந்தைக்கு அதைச் சொல்லி ஆறுதல் அடைய நினைத்தான் அவன். ஆனால், அந்தக் குழந்தை, தான் வாழக் கொடுத்து வைக்காத காதலியின் குழந்தையாகவா இருக்கவேண்டும்! ....பேசாமல் எழுந்து வெளியேபோய்விட்டான். ஆறுதலுக்குப் பதிலாகக் கிடைத்தது என்ன!?**

# அதிர்ச்சி



"விதுரன்"



கதிரவன் கிழக்கு வானத்திலிருந்து தன் பொற்கிரணங்களைச் சிதறிக் கொண்டிருந்தான். சல சல வென்று ஓடிக்கொண்டிருக்கும் ஓடையில் அவனது கிரணங்கள் பிரதிபலித்து ஒரே தங்கமயமாக விளங்கியது. ஓடையின் இரு மருங்குகளிலு மிருந்த மூங்கில் மரங்கள் தென்றலால் மேலும் கீழுமாக வளைந்து தண்ணீரை முத்தமிட்டன. ஓடையின் கரையிலுள்ள ஆலின் இலைகள் சல சல வென்ற சப்தத்துடன் ஆடிக் கொண்டிருந்தன. அதனடியில் அதன் குளிர்ந்த நிழலில் ஒரு யௌவனத் துறவி மெய்ம் மறந்து ஆனந்தமாக உட்கார்ந்து, தான் இது காறும் நடந்து வந்ததினால் உண்டான சிரமத்தையும் மறந்திருந்தான். அவன் அவ்வாறு எவ்வளவு நேரம் உட்கார்ந்திருந்தானோ தெரியாது. சிறிதுநேரம் கழித்து அவன் பின்னால் காலடிச் சப்தம் கேட்டுத் திரும்பிப் பார்க்கையில் ஓர் அழகிய சிறுமி தன் இடையில் ஒரு பொம்மையுடன் அருகிலிருந்த புதர்களின் வழியாக வந்து கொண்டிருந்தாள். அவள் அழகிய ஆடைகள் அணிந்திருந்தாள். அவளுடைய நெற்றியிலிருந்த சுருண்ட மயிர்கள் காற்றினால் ஆடி அவளுடைய வதன அழகைப் பன் மடங்காக்கியது. அவள் நேரே துறவியின் முன் வந்து நின்று ஆச்சரியத்தோடு அவனை நோக்கினாள். ஆனால் நிழலில் உட்கார்ந்திருக்கும் துறவி காவி உடை அணிந்து மிக்க சாந்த சொரூபியாய் விளங்கியதால் அவள் அவனைப் பற்றி அறிய ஆசைகொண்டு அருகே சென்றாள்.

நீ இங்கு யாருக்காகக் காத்திருக்கிறாய்?" என்று கேட்டாள். அதற்கு அத்துறவி, "குழந்தாய்! யாருக்காகவுமில்லை. என்னைச் சுமந்து நடக்குங் கால்களுக்குச் சற்று ஓய்வு கொடுக்கத்தான்." என்று கூறினான். "அப்படியானால் எனக்குக் கொஞ்சம் கிளிஞ்சல்கள் பொறுக்கிக் கொடுக்கிறாயா?" என்றாள். குழந்தாய்! அதற்கென்ன சிரமம்? சந்தோஷமாகப் பொறுக்கிக் கொடுக்கிறேன்" என்று துறவியும் அழகிய கிளிஞ்சல்களைப் பொறுக்கிச் சிறுமியிடம் கொடுத்தான். சிறுமியும் தன்னுடைய பொக்கிஷமாகிய கிளிஞ்சல்களை வாங்கிக்கொண்டு துறவியினருகே உட்கார்ந்தாள். சற்று தூரத்திலுள்ள ஒரு அழகிய வீட்டைக் காட்டி, 'அதுதான் எங்கள் வீடு" என்றாள். பிறகு "நீ எனக்கு ஒரு கதை சொன்னால் உன்னை எங்கள் வீட்டிற்கு அழைத்துச் சென்று, உனக்கு வேண்டியதைக் கொடுப்பேன்." என்று சொல்லிக் கொண்டே சிறுமி தான் உட்கார்ந்திருந்த இடத்தைவிட் டெழுந்

தாள். "மிகவும் சந்தோஷம், குழந்தாய்! பகவான் கடாக்ஷம்," என்று சொல்லிக் கொண்டே துறவி, சிறுமியைப் பின் தொடர்ந்து நடக்கலானான்.

அச் சிறியதூரம் நடப்பதற்குள், கமல்—(அச் சிறுமியின் பெயர்) அடிக்கடி பின்புறம் திரும்பித் துறவியும் தன்னுடன் வருகிருன என்று பார்த்துக் கொண்டும், தன் இடையிலுள்ள பொம்மையை அடிக்கடி முத்தமிட்டுக் கொண்டும் நடந்தாள்.

அத்துறவியோ அச்சிறுமியின் அழகை நோக்கிக்கொண்டே, தனக் கிருந்த பசியையும் மறந்து அவளைப் பின் தொடர்ந்தான். அச் சிறுமி அவ்வூரிலுள்ள ஓர் உத்தியோகஸ்தருடைய பெண் என்று அவனுக்குத் தெரிய வந்தது.

இருவரும் வீட்டை அடைந்தனர். அங்கிருந்த ரோஜாப்பூக்கள், அவைகளின் அருமையான மணத்தால் அவர்களை வரவேற்றன. கமல் துறவியை வீட்டின் கூடத்திற்கு அழைத்துச் சென்ருள். பிறகு அச் சிறுமி தன் வேலையாட்களிடம் என்ன கூறிஞளோ தெரியாது, சற்று நேரத்திற் கெல்லாம் துறவியின் முன் ஒரு வாழையிலையில், ருசிகரமான தின் பண்டங்களும் அன்னமும் கொண்டு வந்து பரிமாறப்பட்டன. துறவி சந்தோஷமும் ஆச்சரியமு மடைந்து, தனக் கிருந்த பசியில் அவற்றை யெல்லாம் சாப்பிட்டுவிட்டுச், சற்றுக் களைப்பாற உட்கார்ந் திருந்தான்.

அன்றைய பகற் பொழுதைத் துறவி மன அமைதியுடனும் சந்தோஷத்துடனும் கழித்தான். மாலை நெருங்கியது. கதிரவனும் மேற்கு வானத்திற் குளித்தான். இருள் சூழ்ந்தது. ஆனல் வீட்டின் கூடத்தில் விளக்குப் பிரகாசிக்கத் தொடங்கியது. உடனே கமல் "நான் அம்மா வந்த பிறகுதான் சாப்பிடப் போகிறேன். வேலையைக் கவனித்துக்கொள்ளுங்கள். நான் அவரிடம் போகிறேன்" என்று ஏதோ தன் வேலை யாட்களிடம் சொல்லிக் கொண்டே, துறவியின் முன் வந்து நின்ருள். "பக்ஷணங்கள் நன்ரு யிருந்தனவா? பழம் ருசியா யிருந்ததா? ஏன்? நான் உங்களைத் தனியாக விட்டுச் சென்று விட்டேனென்று என்னிடம் கோபமா?" என்று தாழ்மையாகக் கேட்டாள்.

"ஆஹா! குழந்தாய்! எல்லாம் அமிர்தம் போலிருந்தது. கடவுள் உன்னைக் காப்பாற்றுவார்" என்று பதி லுரைத்தான் துறவி.

உடனே கமல் அருகி லிருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, நான் கேட்டபடி கதை சொல்லுங்கள்" என்ருள்.

அதற்குத் துறவி, "என்ன கதை வேண்டும்?" என்று கேட்டான்.

அதற்கு அச் சிறுமி "ஒரு காதல் கதை" என்று பதிலுரைத்தாள். "என்ன! காதல் கதையா?" என்று ஆச்சரியத்துடன் துறவி கதையைத் தொடங்கினன்.

"வடக்கே வெகுதூரத்தில் மிகவும் செழிப்பான பிரதேசத்தில் பட்டணபுரி என்ற அழகிய நகரம் இருக்கிறது. இயற்கைக் காட்சிகள் அநேகம் அந்நகருக்கருகே உண்டு. அத்தகைய இயற்கைக் காட்சிகளுக்கும் மனோரம்மியமான வயல்களுக்கு மிடையில் யமுனை நதி கம்மிய குரலால் பாடிக்கொண்டே வளைந்து செல்லுகிறது. அந் நதிக்கரையில் இரண்டு அன்பு பொருந்திய உயிர்கள் அவைகளுக் குள் உள்ள காதலினால் பரவச மடைந்ததுண்டு. அவ்விரு வுயிர் களும் வெகுநாட்கள் வரை யமுனை நதிக்கரைக்கு வருவதும் போவதுமாக இருந்தன. இரு உயிர்களும் குழந்தைப்பருவம் முதல் வாலிபப்பருவம் வரை அவ்விடத்தில் வளர்ந்தன.

காலச்சக்கரம் சுழன்றது. யமுனை நதியும் அவ்விரு வுயிர்க ளைப்பற்றி என்ன வெல்லாமோ நினைத்தது. இரு உயிர்களும் காதலன் காதலிபோல் சிலநாள் வாழ்ந்தன. அவன் (காதலன்) ஜூதிகாவை (காதலி) கண்ணினுள் உள்ள கருமணியைப்போல் எண்ணினான்.

காலமும் வளர்ச்சியும் ஒன்று சேர்ந்து அவர்களிருவரையும் பிரித்தன என்னவாயினும் ஒருதினம் அக்காதலனைத் தவிர வேறொருவனை மணக்க வேண்டி வருமோ என்று நினைக்கும் போதே ஜூதிகாவின் இருதயமே வெடித்து விடும்போ லிருந் தது. ஆனால் அவளுடைய காதலன் கருத்தோ அப்படி அவள் வேறொருவனை மணந்தாலும், ஜூதிகா இன்பமாக வாழ்வாளாகில் அதுவே அவனுக்குச் சாந்தியைக் கொடுக்கும்.

எவ்வாறாயினும் தான் காதலித்த ஒரு பெண்ணைத் தன் னால் மணக்க முடியாமல் போகவே, அவ்வாலிபன் மனக்கலக்க முற்றுத் தன் வாழ்க்கையின் கொடி அதன் இளமையிலேயே முறிந்து விட்டதால் ,சில நாட்களில் உலகப் பற்றற்ற துறவி யானான். துறவி வரம்பெற்ற வாலிபன் தனியாக வெளியே சென்று அமைதியும் ஏகாந்தமுமான இடங்களில் மனச்சாந்தி அடைந்து, காலங்கழித்து வந்தான். இருந்தபோதிலும் அவன் ஜூதிகாவின்மேல் கொண்ட காதல் அவன் மனதைவிட்டகல மறுத்தது.

அவன் இப்பொழுது தன் தாய்நாட்டைவிட்டு அநேக மைல் களுக்கப்பால் வந்துவிட்டான். ஆனால் அவன் காதலி ஜூதிகா அவனுக்குத் தன் காதலின் சின்னமாகக் கொடுத்த அவளுடைய மெல்லிய தாமரையை ஒத்த கைகளால் பூவேலை செய்து தைக்கப் பட்ட—கைக்குட்டை அவனைவிட்டு அகலவில்லை. அதுதான் அவ னுடைய செல்வம். அதுதான் அன்பு. அதில் அவனுடைய காதலி அவனுடைய பெயரைப் பொறித்திருந்தாள்-காரணம்-தன் னுடைய முதல் மகவிற்குத்தான் மனமாரக் காதலித்த தன் காத லன் பெயரை யிட்டு அழைப்பதாக வாக்குறுதி கொடுத்ததை அவள் மறக்கவில்லை" துறவி இங்ஙனம் கூறியபின் ஒரு நீண்ட

பெருமூச்செறிந்தான். பிறகு தன் பையைத்திறந்து அதிலிருந்த ஒரு துணியை— ஆம்! அதுதான் ஜூடிகாவின் அன்பின் அடையாளம்—எடுத்துத் தன் நடுங்கும் கைகளில் வைத்துக் கொண்டான்.

சற்றுநேரம் எங்கும் மௌனம் நிறைந்தது. "அது என்ன?" என்று ஆச்சரியத்துடன் வினவினாள் கமல். துறவி மிகவும் கம்மிய குரலில் "இதுதான் காதலின் சின்னம்" என்றான். தன்னையுமறியாது துறவி கைக்குட்டையைக் கமலிடம் நீட்ட அவள் அதை வாங்கிப் பார்க்க, அதில் "கமல்" என்று பட்டு நூல்களினால் பொறிக்கப் பட்டிருந்தது.

மறுபடியும் துறவி கதையை ஆரம்பித்திருப்பான். ஆனால் வெளியில் மோட்டார் காரின் சப்தம் அவனைக் கதையைத் தொடர்ந்து சொல்ல வொட்டாமல் நிறுத்தியது. கார் வீட்டின் வாசலில் நின்றது. அதிலிருந்து ஓர் அழகிய யுவதி இறங்கி நேரே உள்ளே வந்தாள். உடனே கமல் ஓடிப்போய் அந்த யுவதியைக் கட்டிக்கொண்டாள். ஆம்! அவள்தான் கமலின் தாய்.

சில நிமிஷங்களுக்குப் பிறகு அந்த யுவதி துறவியிருந்த பக்கம் பார்க்கவே துறவி, பாவம் மரியாதையாக எழுந்து நின்றான். தனக்கு உணவளித்த குழந்தையின் தாய் என்று அறிந்தான். யுவதி துறவியின் கையிலிருந்த கைக்குட்டையை நோக்கினாள்; தன்னால் கொடுக்கப்பட்ட அன்பின் சின்னத்தைக் கண்டாள். துறவியின் வாயிலிருந்து அவனை அறியாமல் "ஜூடிகா" என்ற பெயர் நடுக்கத்துடன் வெளிவந்தது. இதைக் கேட்ட யுவதியின் மனம் பதை பதைத்தது. அவளது இருதயத்துடிப்பே நின்று விடும்போலிருந்தது. அவள் தன் கையில் வைத்திருந்த பெட்டியைத் திடீரென்று நழுவவிட்டாள். நிசப்தமான அவ்விரவில் இச்சப்தம் மிகவும் சோகமாக எதிரொலித்தது.

உடனே துறவி தீயை மிதித்தவன்போல், திடீரென்று தன்னுடைய 'மடிசஞ்சியை' எடுத்துக் கொண்டான். அடுத்த கணம் நேரே தோட்டத்தைக் கடந்து வாசலில் செல்வது தெரிந்தது. யுவதியின் வாயிலிருந்து கம்மிய குரலில் நடுக்கத்துடன் "ஐயோ கமல்!" என்ற சொற்கள் வெளி வந்தன. மறுகணம் அவள் வாசல் பக்கம் ஓடிப்போய்த் துறவியை-ஆம்! தன்னுடைய அருமைக் காதலனைப் பார்த்தாள். அப்பொழுது அவளுடைய நீர் நிறைந்த கண்களுக்குத் தென்பட்டது சூன்யமயமான இருள்தான்.

முக்கிய நகரங்களில் வெகு சீக்கிரம்
வெளி வருகிறது.

லியோ பிலிம்ஸாரின்

# பூம்பாவை

தமிழ்ப் படம்

நடிக ரத்தினங்கள்:

| | |
|---|---|
| **K. R.** ராமசாமி | **U. R.** ஜீவரத்தினம் |
| K. சாரங்கபாணி | K. R. செல்லம் |
| T. R. ராமச்சந்திரன் | A. R. சகுந்தலா |
| **N. S.** கிருஷ்ணன் | **T. A.** மதுரம் |

டைரக்டர்: **T.** பாலாஜி சிங் ஸ்டுடியோ: நியூடோன்

பாட்டு
மாரியப்ப சுவாமிகள்

சங்கீத டைரக்ஷன்:
ஆத்தேபள்ளி A. ராமராவ்

திரைக்கதை
கம்பதாசன்

கோயமுத்தூர், காரைக்குடி, வேலூர், புதுச்சேரி, பெங்களூர்,
சென்னை முதலிய முக்கிய நகரங்களில் கூடிய சீக்கிரம்
காண்பிக்கப்படும்.

---

விநியோகஸ்தர்கள்:—

**கந்தன் & கம்பெனியார்,**

கோவை, மதுரை, கோட்டயம்.

மைசூர் சமஸ்தானம்:— பெங்களூர் கண்டோன்மெண்ட்
உள்பட, வட, தென் கன்னடம் ஆகியவற்றிற்கு

**மைசூர் பிலிம் கார்ப்பரேஷன்,**

(96, காந்தி நகர், பெங்களூர் சிடி.)

சென்னை நகருக்கு,

**ஸ்ரீ சாயா & கம்பெனி,**

டிஸ்டிரிபியூடர்ஸ் & எக்ஸிபிட்டர்ஸ், 145, பிராட்வே, மதராஸ்.

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

சி. பி. ஆனந்தம்.



## யுரேனஸின் செல்வாக்குகள்

“ஸ்வர்க்கம் காத்துக் கொண் டிருக்கும்; ஆனால், நரகம் பொறுமையா யிருப்பதில்லை’’ என்பது மேதைகளின் வர்ணனை. அடைவதற் கரியது ஸ்வர்க்கம். இருந்தாலும், அது தகுதி யுடையவர்கள் தன்னை வந்து அடைவதற்காகக் காத்துக் கொண் டிருக்கிறது. அதற்கு நேர் மாறானது நரகம். உயிர்களைக் கொஞ்சமும் தாமதியாமல் வலுவில் வந்து அணைந்து கொள்கிறது. சிறு பாவங்களையுங்கூடப் பொறுக்காது. தயவு, தாக்ஷண்யம், மன்னிப்பு, இந்த வார்த்தைகளுக்கு அதன் அகராதியில் இடங் கிடையாது. இதற் கொப்ப உள்ளது ‘யுரேனஸின் செல்வாக்குகள்’ என்று காணுகின்றனர் மேலைப் புலவர்கள்.

மேலாகப் பார்க்கும் பொழுது முன்னதை யாரும் விரும்புவர்; பின்னதை அஞ்சுவர். ஆனால், விரும்பத் தகுவது உண்மையில் பின்னதுதான். ஏனென்றால், மௌட்டியம் மிகுந்த இன்ப ஏற்றம் ஸ்வர்க்கம். துன்பச் சாட்டைகளால் உண்மை வழியைத் தருவது பின்னது. எனவே, இவ் வழியில் பின்னதை ஒத்த யுரேனஸின் செல்வாக்குகள் உண்மையான விழிப்பைக் கோருகிறவர்களால் வரவேற்கத் தகுந்தது.

“வாழ்க்கையில் தொடர்ந்த தோல்விகள் - அதிர்ச்சிமேல் அதிர்ச்சிகள் - வழி எங்கும் முட்டுக் கட்டைகள் - கரையே காண முடியாத தொல்லைகள் - ஒரே திகைப்பு” என்று இருந்தால், இவையெல்லாம் யுரேனஸின் பலன்கள்தான் என்று கருதப்படுகிறது. வாழ்வின் போக்கை மாற்றி உலகியல் வெற்றிகளி னின்றும் வெகு தூரத்தில் கொண்டு சேர்த்து-வாழ்வின் இன்பத்தை வெறும் பாலையாக்குவது அதன் செல்வாக்கு. வருங் காலத்தைப் பற்றிய நம்பிக்கைகளை யெல்லாம் ஸ்தம்பிக்கும்படி செய்வது அதற்கு வெகு சகஜம். “வெற்றி புருஷனின் முயற்சிக்கு - ஏன், இச்சைக்கு அனுகூலமாகப் பிரகிருதி தேவியின் பிரதி அணுக்களும் அனுதாபஞ் செய்து கொண் டிருக்கும்,” என்னும் அனுபவத்தைப் பொய்யாக்கி விடுவது அதன் முதல் வேலை.



பயங்கரமான அடவியில் பாதைகளெல்லாம் தடைப்பட்டுப் போய்த் திகைப்புடன் நின்றுவிட்ட ஒருவன் என்ன செய்வான்!

அவனுக்கு என்ன தோன்றும்? புறத்தே புக - அல்லது ஏதும் செய்ய முடியாத நிலையில் ஒருவனுக்கு அவனிடமு ள - அதுவரை மறைந்திருந்த சங்கதிகளெல்லாம் விழிப்புக் கொள்ளும். தீவிரமான சிந்தனைகளில் அவை ஈடுபடும். புறத்தே தோன்றும் உலகில் அவனுக் கிருந்த ஆசாபாசம் - நம்பிக்கை ஸ்தம்பித்துப் போகும். வெறும் ஸம்ஸய வழியாய் உலகை நோக்க மனதில் பெருங் கசப் புத் தட்டும். வெற்றி - உலக இன்பம் எல்லாம் அவனுக்குப் பொய் யாய் - வெறும் புனைந்துரைகளாய்த் தோன்றும். பொய்யான - அல்லது அவனுக்குப் பொய்யாய் விடுகின்ற உலகின் நடு தன்னை நோக்கும் வழி திறக்கும். "இதெல்லாம் என்ன? வாழ்க்கையின் லட்சியந்தான் யாது? வாழ விழைந்த நான் யார்? எதற்காக இங்கு இருக்கின்றேன்! கடவுட் சக்தி என்று ஒன்று இருக்கக் கூடுமோ!" என்ற உக்ரமான பிரச்னைகள் தீர்வைக்காக அவன் முன் நிற்கும்.

இவை யெல்லாம் ஆன்ம ஒளிக்கு முனைக் கூட்டுவன வல்லவா! இதனாலல்லவா ஞானிகள் துன்பத் தாக்குதல்களை வரவேற்கின்ற னர்! எனவே, இந் நிலையைத் தரும் யுரேனஸ் என்னும் கிரகத் திற்கு 'ஞான காரகன்' என நிராக்ஷேபமாக வழங்கலாம். மேலைப் புலவர் 'விழிப்பு ஊட்டுவோன்' என்கின்றனர். இந்திய ஜ்யோதிஷ பலபாகம் இராகுவை 'ஞானகாரகன்' என்று கூறுகிறது. இவ்வழி, இந்திய பல பாகத்தில் வரும் இராகுவின் பலன்களே மேலைப் புலவர் கண்ட நூதனக் கோள்களில் வரும் யுரேனஸுக்குக் கற்பிக் கப்பட் டிருப்பது தெளிவாகிறது.

(தொடரும்.)

தொடர் கதை.

# தேவ தேவி

சு. மீ. கணபதி



(சென்ற இதழின் தொடர்ச்சி.)

"தாங்கள் நேற்றுச் செய்த பிரசங்கத்தை நான் கேட்கும் பாக்யம் கிடைத்தது பற்றிச் சந்தோஷிக்கிறேன். முக்யமான விஷயங்களையும் மிகவும் ஜாக்ரதையாகக் கையாண்டு பேசினீர்கள். இது மாதிரி சந்தர்ப்பங்களில் பெரிய பிரசங்கிகளும் தவறிவிடுவார்கள்." என்று வாசுவைப் புகழும் முறையில் தம் பேச்சைத் தொடங்கினர் வந்தவர்.

"அதைப்பற்றி நீங்கள் புகழ்ந்து பேசலாம். பெண்கள் அபிப்ராயம் எப்படி என இன்னும் எனக்குத் தெரியவில்லை. வேறு ஏதாவது விசேஷமுண்டா?" எனக் கேட்டான் வாசு.

தங்களுடைய பிரசங்க வன்மையை அறிந்து நட்புப் பெறத்தான் வந்தேன். தங்களுக்கு மணமாகவில்லை எனத் தெரிகிறது. ஏனெனில் மணமானவர்கள் இவ்வளவு தமாஷாகப் பேசுவது முடியாது என்பது என் எண்ணம்." என்றார் வந்தவர்.

"மறுபடியும் அப்படியேதானே பேசுகிறீர்கள். எனக்கு மணமாகவில்லை என்றால் பெண் பார்க்கவும் தயார் என்று பலர் சொல்லியதுபோல் நீங்களும்........."

"ஆம். நான் உங்களுக்குப் பெண் பார்த்துத் தருகிறேன். மணந்து கொள்வதாக மட்டிலும் சொல்லுங்கள் போதும். மிஸ்டர் காந்தன் உண்மையில் இவருக்கு மணமாக வில்லையா ?"

"இல்லை. அதற்கு வேண்டிய முயற்சிகள் செய்யவேண்டும் என்று எனக்குமிருக்கிறது. காலம் வரட்டும் என்றார் காந்தன்.

"என் கடைசிப் பெண் சாந்தா இருக்கிறாள். இவர் இஷ்டப்பட்டால் செய்து கொள்ளட்டும். சந்தோஷமாகக் கொடுக்கிறேன். என்ன சொல்கிறீர்கள்?" என்றார் இஞ்ஜினீயர்.

"யாரைக் கேட்கிறீர்கள் எனத் தெரியவில்லை. ஆயினும் நானே பதில் கூற விரும்புகிறேன். இவ்வளவு அவசரப் பட்டு உமது பெண்ணை எனக்குக் கொடுப்பதாகச் சொல்லிவிட்டீர்களே. குலம், மாப்பிள்ளையின் நடவடிக்கைகள் இவைபற்றித் தெரிந்துகொண்டு பிறகல்லவா இந்த வார்த்தையைத் தாங்கள் வெளியிடவேண்டும்."

"நீங்கள் மிஸ்டர் காந்தனுக்கு உறவு எனக் கேள்விப்பட்டேன். உங்கள் நடவடிக்கைகள் எப்படியிருக்குமென நன்றாக அறிந்துகொண்டுதான் நான் கூறினேன். என் பெண்ணை இங்கு அழைத்துவரச் சொல்கிறேன்."

"வேண்டாம் அவ்வளவு சிரமம் உங்களுக்குக் கொடுக்க நான் விரும்பவில்லை. நான் பெரிய இடங்களில் சம்பந்தம் செய்து கொள்ள முடியாது."

"காரணம் என்ன?"

"எத்தனையோ இருக்கலாம். விவரிக்கவேண்டிய அவசியமில்லை. இது பற்றித்தானே தாங்கள் பேசவந்தது. அப்படியானால் நான் செல்ல விடை கொடுங்கள்."

"என்ன வாசு! எங்கு செல்ல வேண்டும்? விவாகம் செய்துகொள்ளப் போவதில்லையா? சரியாகப் பேசப்பா. மாமா நீங்கள் பேசாமலிருக்கிறீர்கள். வாசுவுக்கு நீங்களாவது சொல்லுங்கள்" என்றார் காந்தன்.

"நான் சொல்வதற்கு ஒன்றுமில்லை. அவன் ஏற்கனவே பெண் பார்த்துக் கொண்டிருக்கிறான். அவன் இஷ்டம் ஒருபுற மிருக்க நாம் வேறு விதம் செய்யக் கூடாது."

"அவ்விதம் பார்த்திருந்தால் சரிதான்.. நான் சென்று வருகிறேன்" என்று கூறிப் புறப்பட்டார் என்ஜினீயர்.

"வாசு, எங்கு பெண் பார்த்திருக்கிறாய்? எனக்குத் தெரியப்படுத்தாமலிருந்துவிட்டாயே; அநாவசியமாக இப்பொழுது வந்தவரின் வேலையும் கெட்டுவிட்டிருக்கும். நேற்று மாலை உன்னைப்பற்றிக் கேட்டார். உனக்கு மண மாகவில்லை என்றேன். காலையில் அது விஷயமாக வருவதாகச் சொன்னார். நான் சொல்ல மறந்துவிட்டேன். அவர் வந்த பின்பு தான் ஞாபகம் வந்தது" என்றார் சுந்தரம்.

"உங்களுக்குத் தெரியாது. நல்லவேளை வாசு மறுத்துவிட்டான். பெண் எலும்புந் தோலுமாப் பவுடரைப் போட்டுக்கொண்டு கையில் பையையும் எடுத்துக்கொண்டு வருவதைப் பார்த்துவிட்டால் வாசுவுக்கு பிடிக்கவே பிடிக்காது. அதைப் பார்த்தபின்பு சொல்வதைவிட முன்னமேயே சொன்னது நல்லதாயிற்று. ஆமப்பா! வாசு, எங்கு பெண் பார்த்திருக்கிறாய்?"

"கமலா, நான் எங்கும் பெண் பார்க்கவில்லை. அப்பா அவரை அனுப்புவதற்காகச் சொல்லி யிருக்கலாமென நினைக்கிறேன்" என்றான் வாசு.

"சுந்திரா என்ற பெண்ணை நீ மணந்து கொள்ளப் போகிறாய். ஏன் மறைக்க வேண்டும்? உன் இஷ்டத்திற்கு விரோதமாக நாங்கள் நடப்போம் என எண்ணாதே" என்றார் அவன் தகப்பனார்.

"சுந்திரா! அது யாரப்பா? எனக்குத் தெரியவில்லையே. நானும் எதுவும் உங்களிடம் இது விஷயமாகச் சொல்லவுமில்லை. மணத்தைப்பற்றி நினைக்கவுமில்லையே."

"உனக்கு இன்று வந்த கடிதமே அதை நிரூபிக்கிறது. நீ மறுக்க முடியாது."

"ஓ! அதைச் சொல்கிறீர்களா? நான் வேறு எதுவோ என்று நினைத்தேன். என் கூட வேலைசெய்யும் ஒருவனுடைய தங்கை அவள். சிறு குழந்தைமுதல் அக் குழந்தையை நான் அன்புடன் நடத்தி வருகிறேன். அவளும் என்னிடம் அப்படியே நடந்து கொள்வாள். வித்தியாசமான எண்ணங்களுக்கு ஆதாரமே கிடையாது"

"மணம் செய்துகொள்வது என்றால் வித்யாசமான எண்ணம் எங்கிருந்து தோன்றும்? குழந்தை என்கிறாய். அவளுடைய எழுத்து அப்படிச் சொல்ல வில்லையே?"

"இப்பொழுது அவள் குழந்தை யல்லதான். ஆயினும் நான் அப்படித்தான் பாவிக்கிறேன்."

"இது பல நாளைக்கு நீடிக்காது. சின்னுட்களிலேயே மணப்பத்திரிகை நமக்குக் கிடைக்கும். எங்களுக்கு ஆட்சேபணையே இருக்காது" என்ருள் கமலா.

"கமலா, நீ நினைக்கிறபடி இல்லை. அவளுக்கு வரன் தேடுவதில் நானும் ஈடுபட்டிருக்கிறேன். தவிரவும், போட்டி வேறு இருக்கிறது. சுவர்ணவும் என்னை மணந்துகொள்ள வேண்டுமென நினைக்கிருள். இந்தச் சுந்திராவும் அப்படியே. ஆனல் நான் இருவரையும் வேறு இடத்தில் மணம் செய்து கொடுக்கவும், இருவருடைய மணத்திற்குப் பொருளுதவி செய்யவுமே தயாரா யிருக்கிறேன். இவற்றை நீங்களெல்லாம் அறியாதபடியால் ஏதுவோ நினைத்து இப்படிக் கூறுகிறீர்கள். இன்னும் கொஞ்சகாலம் அதாவது அவர்களிருவருக்கும் மணமான பின்பே நான் என் விவாகத்தைப் பற்றி யோசிக்கவேண்டும்."

அச் சமயம் சேவகன் ஒரு சீட்டைக் கொண்டு வந்து காந்தனிடம் கொடுத்தான். "வரச் சொல்" என்ருர். ஒரு பெரிய அம்மாவும், ஒரு பெண்ணும் இவர்களிருக்கு மிடம் வந்து ஆசனங்களில் அமர்ந்தனர்.

"என்ன விஷயமாக வந்தீர்கள்? தனிமையில் பேச வேண்டுமானல் அந்த அறைக்குச் செல்லலாம்" என்று எதிரிலிருந்த அறையைக் காட்டினர் காந்தன்.

"எல்லோரையும் பார்த்துப் போகலாமெனவே வந்தோம். இவள் என் பெண் தேவகி. என் கணவர் வெளியூர் சென்று நான்கு நாட்களாகி விட்டன. நேற்றுப் பிரசங்கம் செய்தவர்தானே அவர். ரொம்ப அழகாகப் பேசினர். அதற்குப் பாராட்டுத் தெரிவிக்கத் தேவகி விரும்பினள். அதற்காகத்தான் வந்தோம்" என்ருள் அந்தப் பெரிய அம்மாள்.

"உண்மையில் உங்களுக்கு எனது பேச்சு நன்ருக இருந்தது என்ருல் நான் சந்தோஷிக்கிறேன். பாராட்டு ஆண்டவனுக்கும், என்னை இவ்வளவு ஆளாக்கி விட்ட என் தகப்பனரையும் சேர்ந்தது என்ருன் வாசு.

"இவ்வளவு அடக்கமும், மரியாதையுமாக எவரும் இருக்க மாட்டார்கள். தங்களுடைய நல்ல குணத்தைத் தெரிந்து கொண்டதும் தேவகி சொல்லியது நியாயமாகவே பட்டது. தங்களுக்கு இன்னும் விவாகமாக வில்லை என நினைக்கிறேன். திடீரென இதுமாதிரி கேட்பதற்கு வருத்தப் படக்கூடாது. தேவகி உங்களை விரும்புகிருள். நன்ருகப் படித்து உலகம் தெரிந்தவள்" என்று நிறுத்தினள் வந்த மனுஷி.

"பிரசங்கத்துக்கு ஒத்துக்கொண்டதே தவறுபோ லிருக்கிறது. பெண் கொடுக்கிறேன். என் பெண் உன்னைக் காதலிக்கிருள்—நல்ல வேடிக்கை யிது!' என்று மனதிற்குள் எண்ணினன் வாசு. மற்றவர்களுக்கெல்லாம் தேவகியின் மீது அன்பு பிறந்தது. நல்ல அழகி.அதுதான் காரணம். வாசு எதையாவது கூறி அவர்களை அனுப்பி விடப் போகிருன் என்று நினைத்துக் கமலா பேசலானள்.

"அதற்கென்ன? உங்கள் வீட்டுக்காரர் வந்த பின்பு பூரா விஷயங்களையும் பேசிக்கொண்டால் போகிறது. தேவகி மிகவும் நல்லபெண் என்று எனக்குத் தெரியும். அவனுக்கு ஆட்சேபனை ஒன்று மிருக்காது' என்ருள்.

"அதைத்தான் நான் வேண்டியது. நான் எப்பொழுதும் தேவகியின் பேச்சை மறுப்பது கிடையாது. இப்பொழுது அதனல் தான் வந்தேன். அவள் முன் ஜன்மத்தில் நல்லபூஜைகள் செய்திருக்க வேண்டும். உங்கள் எல்லோருடைய ஆசீர்வாதங்களும் அவளுக்கு இருக்கும் வரை அவள் எண்ணியபடி நடக்கும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. முகூர்த்தம் எப்.

பொழுது வைத்துக் கொள்ளலாம்? லௌகிக காரியங்களை நீங்கள் விருப்புகிறபடியே செய்கிறேன்.''

"கமலா! என்னை விடப் பெரியவள் போன்று நடந்து கொள்கிறாயே. த யும் அப்பா எதிரிலிருக்கும் பொழுதும், மாப்பிள்ளை இருக்கும் பொழுதும் நீ பேசுவது நன்றாக இ லை. அவர்கள் பேசாமலிருந்தால் பேசுவதை நான் தடுக்கமாட்டேன்''

"உனக்குத் தெரியாதா? கமலா பேச்சுக்கு மறு பேச்சு நானும், மாமாவும் பேசுவது கிடையாது. அவள் ஏதாவது முடிவு செய்தால் எங்கள் அபிப்பிராயத்தை அனுசரித்துத்தான் செய்வாள். அவள் முடிவு கட்டும் எந்த யோசனையும் உருப்படியானதாக இருக்கும்'' என்றார் காந்தன்.

"ஆமாம் வாசு! மாப்பிள்ளை சொல்வது சரிதான். கமலா வயதில் குழந்தையா யிருக்கலாம். ஆனால் புத்திசாலி. அவளுடைய தீர்மானம் ச யானது என நான் நினைக்கிறேன். கமலாவுக்குத் தெரியாத விஷயங்க ஒன்றுமில்லை'' என்றார் அவன் தகப்பனார்.

"நான் இவர்கள் வரும் சமயம் கூறியது கவன மிருக்கிறதா? அந்த இரண்டு பெண்களுக்கும் மணம் முடிவு பெறுகிற வரையில் நான் மணம் என்ற பேச்சையே காதில் போட்டுக்கொள்ள முடியாது. இந்த ஒரு விஷயத்தில் எனக்குக் கடமை இருப்பதால் அதை நினைத்து மன்னிக்கவேண்டும்'' என்றான் வாசு.

"யார் வீட்டுப் பெண்களுக்கோ நீ எதற்குக் கடமைப்பட வேண்டும்? இதெல்லாம் பு சாலித்தன மாகாது. உன் விஷயங்கள் அறிந்துகொள்ள முடியாததா யிருக் றது'' என்றார் அவன் தகப்பனார்.

"அந்தப் பெண்களுக்கு மணம் முடிகிற வரையில் இவர்கள் காத்திருப்பதானால் உங்கள் அபிப்பிராயப்படியே நடந்து கொள்ளத் தடையில்லை. அதிலும் நினைத்தவுடன் ஒரு பெண்ணை மணந்துகொள் எனச் சொல்வது பொருந்தாது. குணம் முதலியவற்றைத் தெரிந்துகொள்ள வேண்டி யிருக்கிறது. சுவர்ண சுந்திரா மணங்கள் முடிந்தபின்பு நான் எதைப்பற்றியும் யோசிக்காமல் நீங்கள் கூறும் பெண் எப்படி யிருந்தபோதிலும் மணந்து கொள்ளச் சித்தமாக இருக்கிறேன். கடமை என்ற விஷயமாகக் கேட்டீர்களே! பிறர் எதிரில் அதைப்பற்றிக் கூறுவது நலமல்ல'' என்றான் வாசு.

"நீங்கள் கூறுவதுபோல் தேவகி காத்திருப்பாள். எவ்வளவு காலமானாலும். ஆனால் முதலில் வெற்றிலை பாக்கு மாற்றிக் கொண்டோமானால் நிச்சயமாக இருக்கும்'' என்றாள் வந்தவள்.

"வாழ்க்கை நிலையானதல்ல. நீங்கள் விரும்புகிறபடி செய்ய முடியாதது பற்றி நான் வருந்தி உங்கள் மன்னிப்பை வேண்டுகிறேன். இங்கிருப்பவர்கள் என் உறவினர். அவர்கள் மூலமாக நீங்கள் நான் அவர்கள் மணத்தை நிறைவேற்ற முயற்சி எடுத்துக் கொள்வது முதல் எல்லாவற்றையும் அறிந்து கொள்ளலாம். அதன் பின்பு உங்களுடைய பேச்சைத் துவக்கலாம் என்பது என் எண்ணம்'' என்றான் வாசு.

"நீங்கள் கூறுகிறபடியே செய்கிறோம். இப்போதைக்கு நாங்கள் உத்திரவு பெற்றுக் கொள்கிறோம்'' என்று எழுந்தாள் தேவகி வாசுவைக் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டே சென்றாள். 'இந்தக் கண்களுக்குத்தான் என்ன சக்தி யிருக்கிறது? வேல்போன்ற கூரிய ஆயுதமாகவல்லவா விருக்கிறது? நமது புத்தியே மாறிவிடும் போலிருக்கிறது. உஷாராகத் தானிருக்க வேண்டும்'' என்று எண்ணினான் வாசு.

(தொடரும்.)

# தாரண ஹு ஆவணிமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடிகாரமணி-சென்னை காலை 6½-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| 1 | 21 | 37 | 16 | 119 | 59 | 88 | 19 | 148 | 45 | 146 | 36 | 131 | 27 | 133 | 46 | 73 | 56 | 93 | 10 |
| 2 | 21 | 41 | 12 | 120 | 57 | 100 | 27 | 149 | 23 | 147 | 11 | 131 | 40 | 135 | 00 | 74 | 02 | 93 | 07 |
| 3 | 21 | 45 | 09 | 121 | 55 | 112 | 36 | 150 | 01 | 147 | 46 | 131 | 53 | 136 | 14 | 74 | 08 | 93 | 04 |
| 4 | 21 | 49 | 05 | 122 | 52 | 124 | 32 | 150 | 49 | 148 | 14 | 131 | 06 | 137 | 28 | 74 | 14 | 93 | 01 |
| 5 | 21 | 53 | 02 | 123 | 50 | 136 | 27 | 151 | 17 | 148 | 41 | 132 | 18 | 138 | 41 | 74 | 20 | 92 | 58 |
| 6 | 21 | 56 | [illegible] | [illegible] | 48 | 148 | 18 | 151 | 55 | 148 | 59 | 132 | 31 | 139 | 55 | 74 | 26 | 92 | 55 |
| 7 | 22 | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | 160 | 08 | 152 | 33 | 149 | 16 | 132 | 44 | 141 | 10 | 74 | 32 | 92 | 51 |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | 172 | 02 | 153 | 11 | 149 | 29 | 132 | 57 | 142 | 24 | 74 | 38 | 92 | 48 |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | 183 | 56 | 153 | 50 | 149 | 31 | 133 | 10 | 143 | 38 | 74 | 43 | 92 | 45 |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | 40 | 196 | 06 | 154 | 28 | (வ 149 | 28 | 133 | 23 | 144 | 52 | 74 | 49 | 92 | 42 |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible]29 | 37 | 208 | 17 | 155 | 06 | 149 | 24 | 133 | 36 | 146 | 06 | 74 | 55 | 92 | 39 |
| [illegible] | [illegible] | [illegible]0 | 37 | 130 | 35 | 220 | 58 | 155 | 44 | 149 | 08 | 133 | 49 | 147 | 20 | 75 | 01 | 92 | 36 |
| [illegible] | [illegible]2 | 24 | 34 | 131 | 33 | 233 | 40 | 156 | 23 | 148 | 52 | 134 | 20 | 148 | 34 | 75 | 06 | 92 | 32 |
| [illegible] | [illegible]2 | 28 | 30 | 132 | 31 | 247 | 09 | 157 | 02 | 148 | 25 | 134 | 15 | 149 | 48 | 75 | 11 | 92 | 29 |
| [illegible] | [illegible]2 | 32 | 27 | 133 | 29 | 260 | 38 | 157 | 41 | 147 | 57 | 134 | 28 | 151 | 02 | 75 | 16 | 92 | 26 |
| [illegible] | 22 | 36 | 23 | 134 | 27 | 275 | 01 | 158 | 20 | 147 | 18 | 134 | 41 | 152 | 16 | 75 | 21 | 92 | 23 |
| [illegible] | [illegible]2 | 40 | 20 | 135 | 25 | 289 | 24 | 158 | 58 | 146 | 38 | 134 | 54 | 153 | 29 | 75 | 26 | 92 | 19 |
| [illegible] | 22 | 44 | 16 | 136 | 23 | 309 | 29 | 159 | 37 | 145 | 49 | 135 | 07 | 154 | 43 | 75 | 31 | 92 | 16 |
| [illegible] | 22 | 48 | 13 | 137 | 21 | 319 | 35 | 160 | 16 | 145 | 00 | 135 | 20 | 155 | 57 | 75 | 36 | 92 | 13 |
| [illegible] | 22 | 52 | 09 | 138 | 19 | 334 | 48 | 160 | 55 | 144 | 04 | 135 | 33 | 156 | 11 | 75 | 41 | 92 | 10 |
| [illegible]1 | 22 | 56 | 06 | 139 | 18 | 350 | 02 | 161 | 33 | 143 | 08 | 135 | 46 | 158 | 25 | 75 | 46 | 92 | 07 |
| 22 | 23 | 00 | 02 | 140 | 16 | 4 | 44 | 162 | 12 | 142 | 09 | 135 | 59 | 159 | 39 | 75 | 51 | 92 | 04 |
| 23 | 23 | 03 | 59 | 141 | 14 | 19 | 26 | 162 | 51 | 141 | 10 | 136 | 12 | 160 | 53 | 75 | 56 | 92 | 00 |
| 24 | 23 | 07 | 55 | 142 | 12 | 33 | 15 | 163 | 30 | 140 | 13 | 136 | 25 | 162 | 07 | 76 | 00 | 91 | 57 |
| 25 | 23 | 11 | 52 | 143 | 11 | 47 | 04 | 164 | 09 | 139 | 16 | 136 | 38 | 163 | 21 | 76 | 04 | 91 | 54 |
| 26 | 23 | 15 | 48 | 144 | 09 | 60 | 01 | 164 | 48 | 138 | 27 | 136 | 51 | 164 | 35 | 76 | 08 | 91 | 51 |
| 27 | 23 | 19 | 45 | 145 | 07 | 72 | 58 | 165 | 27 | 137 | 38 | 137 | 04 | 165 | 49 | 76 | 13 | 91 | 48 |
| 28 | 23 | 23 | 41 | 146 | 05 | 85 | 18 | 166 | 06 | 137 | 01 | 137 | 17 | 166 | 03 | 76 | 17 | 91 | 45 |
| 29 | 23 | 27 | 38 | 147 | 04 | 97 | 38 | 166 | 46 | 136 | 24 | 137 | 30 | 167 | 16 | 76 | 22 | 91 | 41 |
| 30 | 23 | 31 | 34 | 148 | 02 | 109 | 37 | 167 | 25 | 136 | 03 | 137 | 43 | 169 | 30 | 76 | 26 | 91 | 38 |
| 31 | 23 | 35 | 31 | 149 | 01 | 121 | 36 | 168 | 04 | 135 | 42 | 137 | 56 | 170 | 44 | 76 | 30 | 91 | 35 |

**ஆகாயக் காட்சி:-**
4உ பகல் மணி 12-14க்கு சசிக்கு தெற்கில் பா 1 - 11ல் சுக்ரனும்,
4உ இரவு ,, 9-32க்கு ,, ,? பா 1 - 42ல் குருவும்,
6உ காலை ,, 7-50க்கு ,, ,, பா 7 - 46ல் புதனும்,
6உ பகல் ,, 1-30க்கு ,, ,, பா 4 - 14ல் குஜனும்,
27உ பகல் ,, 1-00க்கு ,, வடக்கில் பா 0 - 59ல் சனியும், சந்திர சமாகமம்.

**பிரவேசங்கள் முதலியன:**—2உ பின் இரவு மணி 5-48க்கு அங்காரகனும், 14உ பகல் மணி 10-19க்கு சுக்ரனும், கன்யா ராசிக்குப் பிரவேஸிக்கின்றன. 10உ புதன் வக்ராரம்பம்; 15உ புதன் மேற்கில் வக்ரோதயம்; குரு கிழக்கில் உதயம், 23உ வரை புத சுக்ர சாமீப்யம்; அதன்மேல் பாநுமத்யம்.

* அயனும்சம் பா-22 கலை-57 விகலை 06·0192 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.

† ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

தாரண௵ ஆவணிமீ கலியுகாதி 5046, சாலிவாகனம் 1867
பசலி 1354, கொல்லமாண்டு 1120, ஹிஜிரா 1363
இங்கிலீஷ் 1944௵ ஆகஸ்ட்—1944௵ செப்டம்பர்மீ

| ஆவணி | ஆகஸ்ட் மீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | புத | திர38-23 | புன25-17 | சித்60 | விஷ்ணுபதி புண்ய காலம் |
| 2 | 17 | வியா | சசி40-47 | பூச29-25 | அ29-25சி | மாஸ சிவராத்ரி |
| 3 | 18 | வெள் | ●44-23 | ஆ34-13 | சித்60 | சர்வத்ர " ...யை |
| 4 | 19 | சனி | பிர 48-36 | மக39-13 | அ39-13சி | பாத்திர |
| 5 | 20 | ஞா | துதி54-07 | பூர46-12 | சி46-12அ | சந்திர த |
| 6 | 21 | திங் | திரு58-49 | உத்52-48 | சித்60 | ஷோடசே வதி பூஜ |
| 7 | 22 | செவ் | சது66-00 | அ59-23 | சித்60 | ஸ்ரீ விநாயக |
| 8 | 23 | புத | சது4-47 | சித்60-00 | சித்60 | ரிஷி பஞ்சமி |
| 9 | 24 | வியா | பஞ்7-13 | சித்4-47 | சி4-47அ | சஷ்டி விரதம் |
| 10 | 25 | வெள் | சஷ்10-12 | சு8-56 | சித்60 | அமுக்தாபரண ஸப்த |
| 11 | 26 | சனி | சப்12-07 | வி12-37 | சித்60 | தூர்வாஷ்டமி |
| 12 | 27 | ஞா | அ13-48 | அ15-17 | மர60 | நந்த நவமி |
| 13 | 28 | திங் | நவ12-39 | கே16-13 | சித்60 | க்ஷீர விரதாரம்பம் |
| 14 | 29 | செவ் | தச10-48 | மூல16-10 | அ16-13சி | பரிவர்த்தன ஏகாதசி |
| 15 | 30 | புத | ஏ7-51 | பூ15-23 | அமி60 | கல்கி துவாதசி |
| 16 | 31 | வியா | துவ4-07 திர59-24 | உத்12-35 | சித்60 | |
| 17 | 1 | வெள் | சசி54-14 | திரு9-37 | ம9-37சி | |
| 18 | 2 | சனி | ப○48-17 | அ6-11 | சி6-11அ | |
| 19 | 3 | ஞா | பிர42-13 | சத2-23 பூர58-12 | சி58-13அ | |
| 20 | 4 | திங் | துதி36-17 | உட்53-56 | சித்60 | |
| 21 | 5 | செவ் | திரு29-52 | ரே50-23 | சித்60 | |
| 22 | 6 | புத | சது 24-13 | அசு46-47 | ம46-47சி | |
| 23 | 7 | வியா | பஞ்19-17 | பர43·49 | சி43-49ம | |
| 24 | 8 | வெள் | சஷ்14-55 | ❊ 41-23 | அ41-23ம | கிருத்திகை விரதம் |
| 25 | 9 | சனி | சப்11-24 | ரோ40 17 | அ40-17சி | ருத்ரா மத்யாஷ்டமி |
| 26 | 10 | ஞா | அ12-07 | மிரு40 29 | சித்60 | துர்க்கா நவமி |
| 27 | 11 | திங் | நவ7-53 | திரு42-11 | சி42-11அ | லலித கலே பயில |
| 28 | 12 | செ | தச8-26 | புன44-23 | சித்60 | உத்திரா கார்த்திகை |
| 29 | 13 | புத | ஏ9-35 | பூச47-24 | சித்60 | இந்திர ஏகாதசி |
| 30 | 14 | வியா | து12-37 | ஆயி52-13 | சி 52-13அ | ஜயத்வாதசி, பிரதோஷம் |
| 31 | 15 | வெ | திர16-13 | மக57-41 | ம57-41சி | மக த்ரையோதசி, மாஸ சிவ ராத்ரி. |

1944௵ செப்டம்பர்மீ

ச
ர
2-கன்-செவ்
10-வஆ-புத
14-கன்-சுக்
31-கன்-குரு
கே
சூரி
புத
செ
கு-சு

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
No 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.